

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 18 Issue 3 October 2023 Rs.25
ஆண்டு 18 இதழ் 3 அக்டோபர் 2023 ரூ.25

ஸ்டானிஸ்லாவ் லெம்
ராம் முரளி
அ.இருதயராஜ்
கயல்
ரதன்
அரவிந்தன்
ந.பெரியசாமி
டி.கண்ணன்
பாவண்ணன்
க்ருஷாங்கினி
நோயல் நடேசன்
சௌவி
பொ.கருணாகரமூர்த்தி
சந்தியா நடராஜன்
இந்திரா பார்த்தசாரதி
ஆர்.வத்ஸலா



## ‘ஜெயிலர்’ வணிகமும் ரஜினியின் ஆன்மிக பயணமும்

ஆண்டு 18 இதழ் 3



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

அக்டோபர்-2023 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# பிரபஞ்சத்தைக் காப்போம்

## (ஜான் டிச்சியிடமிருந்து ஒரு வெளிப்படையான கடிதம்)

**ஸ்டானிஸ்லாவ் லெம்**

**தமிழில்: ராம் முரளி**

பூமியில் நீண்ட காலம் தங்கியதற்குப் பிறகு, முந்தைய பயணங்களில் எனக்கு விருப்பமான இடங்களாக இருந்த பெர்சியஸின் கோளத் துகள்கள், கால்ஃப் விண்மீன், விண்மீன் மண்டலத்தின் மையத்தில் இருக்கும் நட்சத்திரம் ஆகியவற்றைப் பார்ப்பதற்காகக் கிளம்பினேன். இந்த எல்லா இடங்களிலும் என்னால் மாற்றங்களைக் காண முடிந்தது. அவை நல்லவிதமான மாற்றங்கள் இல்லை என்பதால், அவற்றைப் பற்றி எழுதுவது எனக்கு வேதனையளிப்பதாக உள்ளது. விண்வெளிக்குச் சுற்றுலா செல்வதை வளர்ப்பது குறித்து இப்போது அதிகளவில் பேசப்படுகிறது. கேள்விக்கு இடமில்லாமல், இந்தச் சுற்றலாத் திட்டம் அற்புதமானதுதான் என்றாலும், அனைத்தும் மிதமானதாகவே இருக்க வேண்டும்.

விண்வெளியை அடைந்த உடனேயே நீங்கள் காணும் காட்சி அருவருப்பூட்டுவதாக இருக்கிறது. செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையிலுள்ள சிறுகோள் பெல்ட் மோசமான நிலையில் உள்ளது. நித்திய இரவால் ஒருகாலத்தில் மூடப்பட்டிருந்த பொக்கிஷப் பாறைகள் இப்போது தன் மீதிருந்த இருள் விலக்கப்பட்டு ஒளிர்ந்து கொண்டிருக்கின்றன. நிலமையை இன்னும் மோசமாக்குவதைப்போல ஒவ்வொரு செங்குத்தான பாறையின் மீதும் தலைப்பெழுத்துகளும் மோனோகிராம்களும் செதுக்கப்பட்டுள்ளன.





குறிப்பாக காதலர்கள் விரும்பும் ஈராஸ், சுயமாகக் கற்றுக்கொண்ட செதுக்கோவியர்களால் செதுக்கப்படும்போது அதிர்கிறது. சில விவேகமுள்ள ஆப்பரேட்டர்கள் அங்குச் சுத்தியல்களையும் உளிகளையும் டிரில் மெஷின்களையும் வாடகைக்கு விடுகின்றனர். ஒருகாலத்தில் கரடுமுரடான பகுதிகளாக இருந்த அவ்விடத்தில் இப்போது ஒருவரால் மனிதனின் கைப்படாத ஒரு பாறையைக் கூட கண்டுப்பிடிக்க முடியாது.

இந்த விண்கல்லின் மீது முதல் பார்வையிலேயே காதல் ஏற்பட்டுவிட்டதைப்போல, அதன் மீது முழுமையாக எல்லா இடங்களிலும் கிறுக்கப்பட்டுள்ளது. மேலும், மோசமான ரசனையால் வரையப்பட்ட அம்பு துளைத்த இதயங்களும் கிறுக்கப்பட்டுள்ளன. செரஸை, பெரிய குடும்பமாக இருப்பவர்கள் ஏதோ சில காரணங்களுக்காக விரும்புவதால், அவ்விடத்தில் நின்று புகைப்படம் எடுத்துக்கொள்ளவதற்கான அதீத உந்துதல் அவர்களுக்கு உண்டாகிறது. அங்குள்ள பல புகைப்படக் கலைஞர்கள் விண்வெளி உடைகளை வெறுமனே போஸ் கொடுப்பதற்காக வாடகைக்கு மட்டும் கொடுப்பதில்லை, மாறாக மலைப்பகுதிகளை ஒரு சிறப்புக் குழம்பால் மூடி, ஒரு பெயரளவிலான கட்டணத்திற்காக அங்குச் சுற்றுலாவுக்கு வரும் அனைத்துக் குழுக்களையும் அதனுடன் சேர்த்து நித்தியத்துவப்படுத்துகிறார்கள். அந்தப் பெரிய படங்கள் பிறகு தேய்த்துப் பளபளப்பாக்கப்பட்டு நிரந்தரமாக்கப்படுகின்றன. வசதியாகப் போஸ் கொடுக்கும் தந்தை, தாய், பேரக்குழந்தைகள், பிள்ளைகள் ஆகியோரை உள்ளடக்கிய குடும்பங்கள் பறைகளின் மீதிருந்து புன்னகைக்கிறார்கள். இது, நான் வாசித்தபடியே 'ஒரு குடும்பச் சூழலை' உருவாக்குகிறது. ஜூனோவைப் பொருத்தவரை, முன்பு அழகாய் இருந்த அந்த வான்கோள் இப்போது அனைத்து



அழகையும் இழந்துவிட்டது. இவ்வாறு கருதும் எவரொருவரும் அந்த வான்கோளில் இருந்து கற்களை வெட்டி விண்வெளியில் அவற்றை வீசியெறிகிறார்கள். நிக்கல்-இரும்பு விண்கற்களையோ (அவை ஞாபகச் சின்ன சிக்னெட் மோதிரங்களாகவோ கஃப்லிங்குகளாகவோ மாற்றப்பட்டு விட்டன) வான்மீன்களையோ மக்கள் கைவிட்டுவிட்டார்கள். ஒரேயொரு வால் நட்சத்திரத்தைக் கூட இனி உங்களால் பார்க்க முடியாது.

சூரியக் குடும்பத்தை விட்டு வெளியேறியதும் காஸ்மோ-பேருந்துகளின் நெரிசலில் இருந்தும், பாறைகளின் மீது நின்று புகைப்படும் எடுத்துக்கொள்ளும் குடும்பங்களிடமிருந்தும் சுவர் கிறுக்கல்களில் இருந்தும் தப்பித்துவிடலாம் என்று நினைத்தேன். ஆனால், என் நினைப்பு தவறாகிப்போனது.

ஆய்வகத்தில் இருந்து பேராசிரியர் புரூக்கி, செண்டாரஸில் இருந்த இரண்டு நட்சத்திரங்களும் மங்கலாக ஆகிவருவதாக அண்மையில் என்னிடம் குற்றம் சாட்டினார். ஒட்டுமொத்தப் பகுதியும் குப்பையால் சூழப்பட்டிருக்கும்போது அந்த நட்சத்திரங்கள் மட்டும் எப்படி மங்கலாக ஆகாமல் இருக்கு முடியும்? இந்த அமைப்பின் முக்கிய ஈர்ப்பாக இருக்கும், கனமான கிரகமான சிரியஸைச் சுற்றி, சனி கிரகத்தைச் சுற்றியிருப்பதைப் போலவே ஒரு வளையம் சூழ்ந்துள்ளது. ஆனால், இந்த வளையம் பீர் பாட்டில்களாலும் எலுமிச்சைப் பழக் கொள்கலன்களாலும் ஆனதாகும். அவ்வழியே பறக்க நேரிடும் ஒரு விண்வெளி வீரர் திரண்டிருக்கும் விண்கற்களை மட்டுமல்லாது, டின் கேன்களையும் முட்டை ஓடுகளையும் பழைய செய்தித்தாள்களையும் தவிர்த்துக்கொண்டே முன்னேற வேண்டும். இந்தக் குப்பைக்கூலங்களால் நட்சத்திரங்களையே பார்க்க முடியாமல் போகும் இடங்களும் இருக்கின்றன. ஆண்டுக்கணக்கில் வானியல் இயற்பியலாளர்கள் பல்வேறு விண்மீன் திரள்களில் உள்ள அண்டத்தில் உள்ள தூசுகளின் அளவு பெருமளவில் அதிகரித்து வருவதற்கான காரணத்தை அறிய தங்கள் மூளையைக் கசக்கிப் பிழிந்து வருகின்றனர். ஆனால், இதற்கான பதில் மிகவும் எளிது என்றே நினைக்கிறேன்: நாகரீகம் எவ்வளவு பெரிதாக வளருகிறதோ, அவ்வளவு பெரியளவில் அது தூசுகளையும் குப்பைகளையும் உற்பத்தி செய்கிறது. வானியல் இயற்பியலாளர்களை விடவும் தூய்மை பணியாளர்கள்தான் இதுகுறித்து அதிகக் கவலைகொள்ள வேண்டும். மற்ற நெபுலாக்களாலும் இதைச் சமாளிக்க முடியவில்லை என்றாலும், ஆனால், அதுவொரு சிறிய ஆறுதல்.

விண்வெளியில் எச்சில் துப்புவது மற்றொரு கண்டிக்கத்தக்கச் செயலாகும். எந்தவொரு திரவத்தையும் போல, எச்சிலும் குறைந்த வெப்பநிலையில் உறைந்துவிடும் என்பதோடு அதன்மீது மோதுவதும் எளிதில் பேராபத்திற்கு வழிவகுக்கும். இதைக் குறிப்பிடுவதற்கு அசௌகர்யமாகத்தான் இருக்கிறது, எனினும் ஒரு பயணத்தின்போது நோயில் வீழும் நபர்கள் திறந்த வெளியை தங்களுடைய தனிப்பட்ட கழிப்பறையைப்போலப் பயன்படுத்துகிறார்கள். அவர்களுடைய இத்துயரத்தின் தடயங்கள் மில்லியன் கணக்கான ஆண்டுகளாகச் சுற்றிக்கொண்டிருக்கும் என்பதை அறியாதவர்கள்போல அவர்கள் செயல்படுகிறார்கள். இது பிற சுற்றுலா

பயணிகளிடையே மோசமான உணர்வுகளைத் தூண்டிவிட்டு, புரிந்துகொள்ளவியலாத வெறுப்பையும் உண்டாக்கும்.

மதுபழக்கம் ஒரு பிரத்தியேகப் பிரச்சனையாகும்.

சிரியஸுக்கு அப்பால், விண்வெளியில் வைக்கப்பட்டிருக்கும் பெரிய விளம்பரப் பலகைகளை நான் எண்ணத் தொடங்கினேன். மார்ஸ் வோட்கா, கேலக்ஸ் பிராந்தி, லூனார் ஜின், சேட்டிலைட் ஷெம்பெய்ன் என்று அந்த எண்ணிக்கை அதிகரித்தபடியே இருந்ததால், ஒரு நிலைக்குப் பிறகு என்னால் எண்ணிக்கையை நினைவில் வைத்துக்கொள்ள முடியவில்லை. சில விமானிகளின் மூலமாக, சில காஸ்மோட்ரோம்கள் அல்கஹால் எரிபொருளைப் பயன்படுத்துவதில் இருந்து மாறி நைட்ரிக் அமிலத்தைப் பயன்படுத்த வேண்டும் என நிர்ப்பந்திக்கப்பட்டதையும் அறிந்துகொண்டேன். அதன்பிறகு, பயணத்திற்கு ஆல்கஹால் எதுவும் மிச்சம் வைக்கப்படவில்லை. ரோந்துப் பணியில் ஈடுபட்டுள்ளவர்கள் மதுபோதையில் வருபவர்களைத் தொலைவில் இருந்து தங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை என்று தெரிவிக்கிறார்கள். தங்கள் தள்ளாட்டத்திற்கு,எடையின்மையே காரணமே தவிர மது அல்ல என்று அந்த மக்கள் சாதிக்கின்றனர். மேலும், விண்வெளி நிலையங்களில் உள்ள சில நடைமுறைகளும் அவமானகரமானவையாக இருக்கின்றன. அங்கு ஒருமுறை என்னிடமிருந்த இருப்பு பாட்டில்களில் ஆக்ஸிஜனை நிரப்பும்படி நான் கேட்டிருந்தேன். ஒரு பர்சாக் (Parsec) தூரத்தைக்கூட கடந்து சென்றிருக்க மாட்டேன், அதற்குள் விசித்திரமான இரைச்சலை என்னால் கேட்க முடிந்தது. அப்போதுதான் ஆக்ஸிஜனுக்குப் பதிலாக, சுத்தமான காக்னாக்கை அவர்கள் நிரப்பியிருப்பதை என்னால் கண்டறிய முடிந்தது. நான் திரும்பிச் சென்று அந்த நிலைய இயக்குனரிடம் விசாரித்தபோது, அவருடன் பேசுகையில் நான் கண் சிமிட்டியதாகத் தெரிவித்தார். ஒருவேளை நான் கண் சிமிட்டி இருக்கலாம் - எனக்கு அப்படியொரு பழக்கம் இருக்கிறது - ஆனால், அதற்காக அவருடைய இச்செயலை நியாயப்படுத்த முடியுமா?

முக்கிய வழித்தடங்களிலும் குழப்பம் நிலவிவருகிறது. வழக்கமாகவே ஏராளமானவர்கள் வேகவரம்பைக் கடந்து அதி விரைவாகச் செல்வதால் இவ்வளவு எண்ணிக்கையில் விபத்துகள் நடப்பது குறித்து ஆச்சரியமடைய மாட்டேன். பெண்கள்தான் மிகமோசமான குற்றவாளிகள்: வேகமாகச் செல்வதன் மூலம் நேரத்தின் பாதையைக் குறைத்து, குறைந்த வயதைத் தக்கவைத்துக்கொள்கிறார்கள். மேலும், அடிக்கடி ஒருவரால் ராட்டில்ட்ராப்பையும் எதிர்கொள்ள முடிகிறது. கிரகணத்தின் நீளத்தை தனது புகையினால் மாசுப்படுத்தும் காஸ்மோ பேருந்துகளைப்போல ராட்டில்ட்ராப்பும் செயல்படுகின்றன.

பாலிண்ட்ரோனியாவில் தரையிறங்கி, புகார்ப் புத்தகத்தை அங்கிருந்தவர்களிடம் கேட்டபோது, முந்தைய நாளில் ஒரு விண்கல் விழுந்து அந்தப் புத்தகம் அழிந்துவிட்டதாகத் தெரிவித்தார்கள். மேலும் ஆக்ஸிஜன் விநியோகமும் குறைந்துகொண்டே வருகிறது. பெலூரியாவில் இருந்து ஆறு ஒளி ஆண்டுகளுக்குப் பிறகு அதை எங்கும் பெற முடியாது. அவ்விடத்தைச் சுற்றிப் பார்க்கச் செல்லும் மக்கள் தாமாகவே உறைந்துபோய்,கிட்டதட்ட சாவினை ஒத்த நிலையில், அடுத்த கட்ட காற்று ஏற்றுமதி செய்யப்படும் வரை காத்திருக்க வேண்டிய சூழல் நிலவுகிறது. ஏனெனில், அவர்கள் உறைந்த நிலையை அடையாமல் தொடர்ந்து உயிருடன் இருக்க முற்பட்டால் சுவாசிப்பதற்கு அவர்களுக்கு எதுவுமே கிடைக்காது. நான் வந்தபோது காஸ்மோட்ரோனில் யாருமே இல்லை. அவர்கள் அனைவரும் குளிரூட்டிகளில் உறங்கிக் கொண்டிருந்தனர். ஆனால், சிற்றுண்டிச் சாலையில் அன்னாச்சிப்பழக் காக்னாக்கில் இருந்து பில்ஸ்னர் வரையிலான மதுபான வகைகள் அங்குப் பட்டியலிடப்பட்டிருப்பதை என்னால் பார்க்க முடிந்தது.

பெரியளவிலான பாதுகாப்பிற்குள் இருந்த கிரகங்களில், சுகாதார நிலமைகள் மூர்க்கத்தனமாக இருந்தன. மெர்சிடூரியாவின் குரல் பத்திரிகையில் (Voice of Mersituria), ஸ்வாலுர்கர்ஸ் எனும் அற்புதமான விலங்களை அழித்தொழிப்பதற்கு அழைப்பு விடப்பட்டிருந்த கட்டுரை ஒன்றை வாசித்தேன். இந்த வேட்டையாடி விலங்குகள் தமது மேல் உதடுகளில் பல்வேறு விதமான பளபளக்கும் மருக்களைக் கொண்டிருக்கும். எனினும், கடந்த சில வருடங்களில் இரண்டு பூஜ்ஜியங்களின் வடிவத்தில் மருக்களையுடைய பல்வேறு வகையிலான ஸ்வாலுர்கர்ஸ் அடிக்கடிக் காணப்படுகின்றன. பொதுவாக மக்கள் முகாமிடப்படும் இடங்களுக்கு அருகில்தான் ஸ்வாலுர்கர்ஸ் வேட்டையாடுகின்றன. இரவு நேரங்களில், இருளுக்குள் மறைந்திருந்தபடியே தமது அகலமான தாடைகளைப் பிளந்து வைத்துக்கொண்டு அவை படுத்திருக்கும். ஒதுக்குப்புறமான இடங்களைத் தேடும் மனிதர்களுக்காகவே அவை காத்திருக்கின்றன. இந்த விலங்குகள் முற்றிலுமாகத் தீங்கற்றவை என்பதையும் குற்றம்சாட்டப்பட வேண்டியவர்கள் சரியான குழாய் வசதி இல்லாதவர்கள் தானே தவிர இந்த விலங்கினங்கள் இல்லை என்பதையும் கட்டுரையாளர் உணரவில்லையா?

இதே மெர்சீடூரியாவில், பொதுமக்களுக்குத் தேவையான வசதிகள் இல்லாததால் பூச்சியினங்களின் மத்தியிலும் தொடர்ச்சியான பாதிப்புகள் ஏற்படுகின்றன.

அழகிய காட்சிகளுக்குப் பிரபலமான இடங்களில் உங்களால்,அடிக்கடி,வசதியான நகரும் அமைப்பிலான விக்கர் நாற்காலிகளைப் பார்க்க முடியும்.



அக்காட்சியால் ஈர்க்கப்பட்டு, அந்த நாற்காலிகளில் ஒருவர் அமர்ந்தால் அந்த நாற்காலி அவரைத் தாக்கத் தொடங்கிவிடும். ஏனெனில், அது உண்மையிலேயே நாற்காலி அல்ல. உடலில் புள்ளிகளைக் கொண்ட எறும்பினம் (பாட்டம்பைட்டர் சேர் ஆண்ட், Multipodium Pudostellatum Trylopii) ஆயிரக்கணக்கில் திரண்டு அவ்விடத்தில் ஒரு நாற்காலியைப் போன்ற தோற்றத்தில் அவை இருக்கின்றன. வேறு சில குறிப்பிட்ட வகையிலான கணுக்காலிகள் (ஃபிரிப்பிள்ஸ்,ஸ்க்ரூச்ஸ்,ப்ரூடலேசியன்ரோலிபீட்ஸ்) சோடா ஸ்டாண்டுகளைப் போலவும் கயிற்றூஞ் சலைப் போலவும் தோற்றமளிப்பதாகவும் நீர்த் தெளிக்கும் குழாய் மற்றும் துண்டுகளைப்போல தோற்றமளிப்பதாகவும் வதந்திகள் பரவுகின்றன. ஆனால், இதுபோன்ற கருத்துகளின் உண்மைத்தன்மையை என்னால் உறுதியளிக்க முடியாது. அத்தகையவற்றை நான் பார்த்ததுமில்லை. மேலும் எறும்பியல் ஆய்வாளர்களும் இதுகுறித்து மௌனமே சாதித்து வருகிறார்கள். எனினும், ஒரு அரிய உயிரனமான ஸ்நேக்ஃப்பூட்டர்டெலெஸ்கோப்பர் (Anencephalus pseudoopticus tripedius Klaczkinensis) குறித்து நான் எச்சரிக்கை செய்ய வேண்டும். இந்த டெலெஸ்கோப்பரும் அழகிய காட்சிகள் உள்ள இடத்தில்தான் நிலைகொண்டிருக்கிறது. தனது மூன்று நீண்ட மெலிதான கால்களை முக்காலியைப்போல விரித்து நின்றுகொண்டு, தனது குழாய் போன்ற வாலை இயற்கை காட்சிகளின் மீது குறிவைத்தபடியே நின்றிருக்கிறது. தனது திறந்த வாயில் திரண்டொழுகும் உமிழ்நீருடன் ஒரு தொலைநோக்கியின் லென்ஸைப்போலவே போலி செய்துகொண்டிருக்கும் இது கவனக்குறைவான சுற்றுலாவாசியைத் தன்னை நோக்கி பார்க்கும்படி ஈர்க்கும்தன்மையில் இருக்கும். பின்னர், இதன் பின்விளைவுகள் தீவிரமான அசௌகர்யங்களை ஏற்படுத்தும். மற்றொரு பாம்பான ட்ரிப்பர்ஸ்னீக் (SerpensvitiosusReichenmantli)கௌரிமாச்சியா கிரகத்தில் காணப்படுகிறது. புதர்களில் பதுங்கியிருக்கும் இப்பாம்பினம், அவ்வழியே எச்சரிக்கை உணர்வில்லாமல் செல்லும் பயணிகளைத் தனது வாலால் தாக்குகிறது. எனினும், இந்த ஊர்வனம் பிரத்தியேகமாக அழகிகளை மட்டுமே குறிவைத்து தனது உணவாக்கிக்கொள்கிறது. இது வேறு எதுபோன்றும் போலி செய்வதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பிரபஞ்சம் ஒரு விளையாட்டு மைதானம் அல்ல. அல்லது அதனுடைய உயிரியல்ரீதியிலான பரிணாமம் வேடிக்கையானதும் அல்ல. டெர்டிமோனாவில் நான் பார்த்ததுபோன்ற சிற்றேடுகளை நாம் வெளியிட வேண்டும். முன்னனுபவம் இல்லாத தாவரவியலாளர்களுக்கு க்ரூயுல்லா (Pliximiglaquia bombardons L.) குறித்து நாம் எச்சரிக்க வேண்டும். க்ரூயுல்லாவில் அழகிய பூக்கள் இருக்கின்றன என்றாலும் அவற்றை நாம் பறித்துவிடக்கூடாது. ஏனெனில், முலம்பழத்தின் அளவில் கூர்மையான ஒரு பழத்தை வழங்கும் பிரையன்வாஷர் எனும் மரத்துடன் இந்தச் செடி தனது இருத்தலைப் பகிர்ந்துகொள்கிறது. தாவரவியலாளர் கவனக்குறைவுடன் ஒரேயொரு பூவைப் பறித்தாலும்கூட, கற்களைப்போல உறுதியான பழங்கள் அவர் தலையின்மீது ஏராளமாக விழும். அதன்பிறகு, க்ரூயுல்லாவோ பிரையன்வாஷர்

மரமோ பாதிக்கப்பட்டவருக்கு எந்தத் தீங்கையும் செய்வதில்லை. தமது மரணத்தால் இயற்கையின் விளைவாக அந்நிலத்திற்கு அவர்கள் உரமாக மாறிவிடுவதால் பிரையன்வாஷர் மரமும் க்ரூயுல்லா செடியும் வெறுமனே திருப்தி மட்டுமே அடைகின்றன.

ஆனால், பாதுகாப்பிற்குள் இருக்கும் அனைத்துக் கிரகங்களிலும் இதுபோன்ற அற்புதமான நகலெடுத்தல் செயல்கள் நடந்தபடியே இருக்கின்றன. உதாரணமாக, பெலூரியாவின் சவன்னாஸ் ஏராளமான வண்ணப் பூக்களால் நிறைந்துள்ளது. அதில், பேரழகும் நறுமணமும் உடைய சிவப்பு நிற ரோஜாக்களும் உள்ளன (Rosa mendatrix Tichiana, பேராசிரியர் பிங்கிள் இவ்வாறு அதற்குப் பெயரிட்டார். எனினும், அதுகுறித்து முதலில் விவரித்திருப்பது நான்தான்). ஆனால், உண்மையில் இது ஹெர்பெட்டான் எனப்படும் பெலூரியாவில் உள்ள வேட்டை உயிரினம் ஒன்றின் வாலில் வளரக்கூடிய பூக்களாகும். பசித்திருக்கும் இந்த ஹெர்பெட்டான் முட்புதருக்குள் பதுங்கியிருக்கும். தனது அதிநீண்ட வாலை வெகு தொலைவிற்கு வெளியே நீட்டிக்கொண்டிருக்கும். இதனால் அதன் வாலில் இருக்கும் பூ மட்டும் புல்லில் இருந்து வெளியே நீட்டிக்கொண்டிருக்கும். இதுகுறித்து எவ்விதச் சந்தேகமும் இல்லாமல் இதன் வாசனையை நுகர்வதற்கு அதை நோக்கி கீழே குனிந்தால், அந்த மிருகம் பின்புறத்தில் இருந்து அவர் மீது பாய்ந்துவிடும். அதனுடைய தந்தங்கள் கிட்டத்தட்ட யானையின் தந்தத்தின் நீளத்தில் இருக்கும். ஒவ்வொரு ரோஜாவும் முட்களைக் கொண்டிருக்கும் எனும் பழமொழிக்கு என்னவொரு விசித்திரமாக வேற்றுகிரக உறுதிப்படுத்தல் இந்த ரோஜாக்கள்!

நான் இன்னும் கொஞ்சம் விலகிச் சென்றால், பெலூரியனின் மற்றொரு அதிசயத்தை என்னால் நினைவுக்கூராமல் இருக்க முடியவில்லை. உருளைக்கிழங்கின் வகையினமான இதன் பெயர் செண்டியண்ட் ஜெண்டியன் (Gentiana sapiens suicidalis Pruck). இந்தத் தாவரத்தின் பெயர் அதனுடைய மனநலக் கூறுகளில் இருந்தே வைக்கப்பட்டிருக்கிறது. இனிப்பு மற்றும் மிக சுவையான பல்புகளை இவை கொண்டிருக்கும். இந்தத் தாவரத்தில் ஏற்படும் மாற்றங்களினால், வழக்கமாக உற்பத்தி செய்யும் பல்புகளுக்குப் பதிலாகச் சில நேரங்களில் சிறிய அளவிலான மூளைகளை இது உருவாக்கும். இவ்வாறு திரிபுகொள்ளும் கிரேஸி ஜெண்டியன் (Gentiana mentecapta) வளர வளர அமைதியற்ற நிலையை எய்துகிறது. தாமாகவே பிடுங்கிக்கொண்டு, காட்டிற்குள் சென்று, ஏகாந்தமான தியான நிலையில் தன்னை இது இருத்திக்கொள்ளும். பிறகு, வாழ்க்கை வாழ்வதற்குத் தகுதியற்றது எனும் முடிவுக்கு வந்து, தற்கொலை செய்துகொள்ளும்.

பெலூரியனின் மற்றொரு தாவரமான ஃபுரியோலைப் போல, இது மனிதர்களுக்குத் தீங்கு விளைவிப்பதில்லை. ஃபுரியோல் எனும் இவ்வினம் சகித்துக்கொள்ள முடியாத சிறுவர்களால் உருவாக்கப்படும் சூழலுக்கு ஏற்றார்போலத் தன்னை அமைத்துக்கொண்டது. இத்தகைய சிறுவர்கள் தொடர்ச்சியாக அங்குமிங்கும் ஓடியபடியும் தங்கள் பாதையில் இருக்கக்கூடிய இதுவொன்றையும் தள்ளியபடியும் உதைத்தபடியும் இருக்கிறார்கள். அதோடு, ஸ்பைனி ஸ்லோத்தோடைல் முட்டைகளை உடைக்கவும் விரும்புகிறார்கள். ஃபுரியோல் முட்டையின் வடிவத்தை ஒத்த பழங்களை உற்பத்தி செய்கிறது. இதைப் பார்க்கும் ஒரு சிறுவன் தன்னெதிரில் முட்டை இருப்பதாக நினைத்து, அதை சிதைக்கும் உந்துதலில் உதைத்து நொறுக்கிறார். இதனால், அந்தப் போலி முட்டைகளில் இருக்கும் வித்துகள் வெளியேறி அவனுடைய உடலுக்குள் நுழைகின்றன. அந்தச் சிறுவன் வெளிபார்வைக்கு மிகச் சாதாரணமான தனிநபராகத் தோற்றமளித்தாலும் அவனுக்குள் குணப்படுத்தவியலாத வீரியமிக்க செயலாக்கம் ஏற்கெனவே அமைக்கப்பட்டிருக்கும்: சீட்டாட்டம், குடிபோதையில் இருப்பது, துஷ்பிரயோகம் ஆகியவை இந்தப் பாதிப்பின் இதற்கடுத்த நிலைகளாகும். இதன்முடிவாக, ஒன்று அவர் மரணத்தைத் தழுவக்கூடியவராக இருப்பார் அல்லது இவ்விஷயங்களில் சிறந்து செயல்படுகிறவராக இருப்பார். புரியோலை அழிக்க வேண்டும் என்கிற கருத்தை நான் அவ்வப்போது கேள்வியுறுவதுண்டு. இவ்வாறு சொல்பவர்கள் ஃபுரியோலை அழிப்பதற்குப் பதிலாக, வெளி கிரகங்களில் உள்ளவற்றை உதைக்கக்கூடாது என்று சிறுவர்களுக்கு அறிவுறுத்துவது குறித்து யோசிப்பதில்லை.

இயல்பிலே நான் ஒரு நம்பிக்கைவாதி என்பதால் மனிதர்கள் மீது நம்பிக்கை வைக்க முயற்சிக்கிறேன். ஆனால், எல்லா நேரங்களிலும் இவ்வாறு நம்பிக்கை வைப்பது எளிதாக இருப்பதில்லை. புரோஸ்டோஸ்டெனெசாவில் ஸ்கிரிபில்மாக் எனும் சிறிய பறவை வாழ்கிறது. இது பூமியில் உள்ள கிளியைப் போன்றே இருக்கும். இப்பறவை பேசுவதற்குப் பதிலாக எழுதும் இயல்பைப் பெற்றிருக்கிறது. பூமியில் இருந்து வரும் சுற்றுலாப் பயணிகளிடம் இருந்து கற்றுக்கொண்ட ஆபாசவார்த்தைகளை இந்தப் பறவை அவ்வப்போது தடுப்பு வேலிகளில் எழுதுகிறது. சிலர் வேண்டுமென்றே இந்தப் பறவை எழுதும் சொற்களில் உள்ள எழுத்துப்பிழைகளைச் சுட்டிக்காட்டி அதைக் கோபப்படுத்துகிறார்கள். காணக் கிடைக்கும் எதுவொன்றையும் உட்கொள்ளும் பழக்கமும் இந்தப் பறவைக்கு இருக்கிறது. அவர்கள் இந்தப் பறவைக்கு இஞ்சி, உலர்ந்த திராட்சை, மிளகு மற்றும் சூரிய உதயத்தின்போது நீண்ட கூக்குரலை அப்பறவை வெளிப்படுத்த உதவும் யெல்லோயார்ட் எனும் மூலிகை ஆகியவற்றைத் தின்னக் கொடுக்கிறார்கள் (இது சில சமயங்களில் துயிலெழுப்புவதற்கான அலாரமாகவும் பயன்படுத்தப்படுகிறது). அதிகமாக



உணவு உட்கொண்டு அப்பறவை இறந்துவிட்டால், பிறகு அந்தப் பறவையையே பொறித்து விருந்தாகப் பரிமாறுகிறார்கள். இது சுவை மிகுந்த சிறந்த உணவாகக் கருதப்படுவதால், புரோஸ்டோஸ்டெனெசாவிற்கு வருகைதரும் ஒவ்வொரு சுற்றுலாவாசியும் வறுத்த ஸ்கிரிபில்மாக் பறவையை உண்பதற்கு விரும்புகிறார்கள். இதனால் இப்பறவை இப்போது அழிவின் விளிம்பில் இருக்கிறது.

மற்றகிரகங்களில் உள்ள உயிரினங்களை மனிதர்கள் சாப்பிடுவதில் தப்பில்லை எனச் சிலர் நம்புகிறார்கள். ஆனால், இதற்கு நேரெதிராக, மனிதர்களை இவ்வுயிரினங்கள் சாப்பிடத் தொடங்கினால், அவர்கள் கூட்டாகக் குரலெழுப்பி அழுகிறார்கள். இராணுவத்தின் உதவியை நாடுகிறார்கள். அவ்வுயிரினங்களைக் கடுமையாகத் தண்டிக்கும்படி வலியுறுத்துகிறார்கள். எனினும், வேற்றுகிரகத்தைச் சேர்ந்த ஃபுளோராவும் ஃபானாவும் தமக்கு துரோகம் இழைத்துவிட்டதாக மனிதர்கள் குற்றம்சாட்டுவது மானுடவியல்ரீதியிலான முட்டாள்தனமே ஆகும். காய்ந்த மரக் குச்சியைப்போலத் தோற்றமளிக்கும் கொடிய டெசெப்டோரைட், மலை பாதையில் தனது பின்னங்கால்களை அடையாளங்காட்டிகளைப்போல வைத்து நின்றுகொண்டு, அவ்வழியே நடந்துசெல்பவர்களைத் தவறாக வழிநடத்தி, பள்ளத்தில் விழச்செய்து, விழும்போது அவர்களை உட்கொண்டால், அதாவது டெசெப்டோரைட் இவ்வாறு செய்தால், பாதுகாப்புப் பகுதியில் இருக்கும் வனத்துறையினர் சாலை அடையாளங்காட்டிகளைச் சரிவரி பராமரிப்பு செய்யாததே அதற்குக் காரணம் என்றே நான் சொல்வேன். அடையாளங்காட்டியில் உள்ள வண்ணங்கள் உதிர்ந்தால், அவை உலர்ந்து அந்த விலங்குகளைப்போலவே தோற்றமளிக்கும். இந்த இடத்தில் எந்த உயிரினம் இருந்தாலும் இதையேதான் செய்யும்.

ஸ்ட்ரெடோஜெண்ட்சியாவின் புகழ்பெற்ற அற்புதங்கள் மனிதர்களின் தீய விருப்பங்களையே சார்ந்து இருக்கின்றன. ஒருகாலத்தில், இந்த கிரகத்தில் சில்லிப்ஸ் அதிகளவில் காணப்பட்டன, வார்ம்ஸ்ட்ரெல் அரிதாகவே எங்கேனும் காணப்பட்டது. இப்போது வார்ம்ஸ்ட்ரெல்கள் அதிசயத்தக்கவகையில் அதிகரித்துவிட்டன. அவற்றின் முட்களுக்கு மேலாக இருக்கும் செயற்கையாக உருவாக்கப்படும் மாறுபட்ட காற்றானது, ஏராளமான மதுகடைகளில் அற்புதங்களை உண்டாக்கியது. எனினும், இது செயற்கையாகக் காற்றை உருவாக்குகிறது என்பதால் பூமியில் இருந்து வரும் பயணிகள் பலரின் மரணத்திற்கும் இது வழிவகுத்தது. இந்த மரணங்களுக்கு வார்ம்ஸ்ட்ரெல்களையே குற்றம்சாட்டவேண்டும்என்றுசொல்லப்படுகிறது. ஏன் அவற்றின் அற்புதங்கள் பள்ளிகளிலும் நூலகங்களிலும் சுகாதார மையங்களிலும் அற்புதங்களை உண்டாக்கவில்லையா? ஏன் எப்போதும் அவற்றின் பயன்பாடு, போதை மருந்துகள் விற்கப்படும் இடங்கள் குறித்து மட்டுமே காட்டப்பட வேண்டும்? இதற்கான பதில் எளிமையானது. ஏனெனில், இம்மரங்களில் மாற்றங்கள் உருவாவது இயல்பானதுதான் என்பதால் வார்ம்ஸ்ட்ரெல்கள் முதலில் எல்லா விதமான அதிசயங்களையும் உருவாக்கின. ஆனால், மக்கள் நூலகங்களையும் பெரியோருக்கான கல்வி வகுப்புகளையும் புறக்கணித்துவிட்டதால், அவ்விடங்களில் இருந்த வார்ம்ஸ்ட்ரெல்கள் உணவில்லாமல் மடிந்துவிட்டன. மதுகடைகளில் ஒளிரும் வகை (Anthropophagi குடும்பத்தைச் சேர்ந்த Thermomendax Spirituosus Halucinogenes) மட்டுமே தப்பிப் பிழைத்தது. மனிதச் செய்கைகளாலே எஞ்சியிருக்கும் இந்தச் சிறப்பு வகைமை மனிதர்களின் தீமையை வெளிப்படுத்தும் வீரியமிக்கதொரு குற்றச்சாட்டாகும்.

சிறிது காலத்திற்கு முன்னால், ஸ்ட்ரெடோஜென்ட்சியா எக்கோ (Stredogentsia Echo) ஆசிரியருக்கு எழுதப்பட்டிருந்த ஒரு கடிதம் என்னைக் கோபப்படுத்தியது. பூங்காக்களுக்குப் பெருமை சேர்க்கும் பெருமரங்களான வார்ம்ஸ்ட்ரெல்லையும் சொலிந்தியாஸையும் அகற்றுமாறு அக்கட்டுரையாசிரியர் வலியுறுத்தி எழுதியிருந்தார். அம்மரங்களின் பட்டையை வெட்டினால் நச்சுத்தன்மை மிகுந்த, பார்வையைக் குருடாக்கக்கூடிய சாறு வெளியே பிதுங்கிக்கொண்டு வரும். அதனால், மேலிருந்து கீழ் வரை பயணிகளால் துளியும் செதுக்கப்படாமல் இருக்கும் ஸ்ட்ரெடோஜென்ட்சியன் கடைசி மரம் சொலிந்தியாஸ்தான். இதை நாம் அகற்ற வேண்டுமா? வெங்கரிக்ஸ், மரவ்டோலா, மோர்செலோன், எலெக்ட்ரிக் ஹவ்லர் போன்ற மதிப்புமிக்க உயிரினங்களுக்கும்இதேபோன்றவிதி அச்சுறுத்துகிறது. இதில் எலெக்ட்ரிக் ஹவ்லர், காட்டிற்கு வரும் எண்ணற்ற பயணிகள் பயன்படுத்தும் பதற்றத்தைக் கூட்டும் ரேடியோக்களின் இரைச்சல்களில்

இருந்து தன்னையும் தனது சுற்றத்தையும் பாதுகாத்துக்கொள்ளும் திறனை இயற்கைத் தேர்வின் மூலமாகவே வளர்த்துக்கொண்டுள்ளது. குறிப்பாக, அதிகச் சத்தம் மிகுந்த ராக் அண்ட் ரோலாவை முற்றாக ரத்துசெய்யும் திறனை அது வளர்த்துக்கொண்டுள்ளது. ஹவ்லரின் மின் உறுப்புகள் சூப்பர்ஹெட்டரோடைன் அலைகளை வெளியிடுகின்றன. அதனால் இயற்கையின் இத்தகைய அசாதாரணமான படைப்பு உடனடியாகவே பாதுகாக்கப்பட வேண்டும்.

ஃபவுல் டெய்ல் ஃபெட்டிடோவைப் பொருத்தவரை, அது வழங்கும் நறுமணத்திற்கு நிகராக வேறெதுவும் இல்லை. மில்வாக்கி பல்கலைகழகத்தைச் சேர்ந்த டாக்டர். ஹாப்கின்ஸ் குறிப்பாகச் செயலில் இருக்கும் ஃபெட்டிடோ வினாடிக்கு ஐந்து கிலோரீக்ஸ் (kr) அளவுக்கு இந்த நறுமனத்தை உற்பத்தி செய்கிறது எனக் கணக்கிட்டிருக்கிறார். ஆனால், ஃபெட்டியோ புகைப்படம் எடுக்கப்படும்போது மட்டும்தான் இவ்வாறு செய்யும் என்பதை ஒரு குழந்தை கூட அறிந்திருக்கும். கேமரா ஒன்று ஃபெட்டியோவைக் குறிபார்க்கும்போது லெண்டிக்குலர்சப்காடல் ரிஃப்ளெக்ஸ் எனும் எதிர்வினை ஃபெட்டியோவில் தூண்டப்படுகிறது. ரப்பர்நெக்குகளின் ஊடுருவலில் இருந்து இந்த அப்பாவி உயிரினத்தைப் பாதுகாக்கச் செய்யும் இயற்கையின் ஆற்றலே இது. கிட்டப்பார்வையைக் கொண்ட ஃபெட்டியோ கேமரா என்று ஆஷ்ட்ரேக்கள், லைட்டர்கள், கை கடிகாரங்கள், பதக்கங்கள், பேட்ஜ்கள் போன்றவற்றை நினைத்துக்கொள்கிறது என்பது உண்மைதான் என்றாலும் சுற்றுலாவாசிகள் சிறியளவிலான கேமராக்களைப் பயன்படுத்துவதே இதற்குக் காரணம் என்பதும் பகுதியளவில் உண்மையானதுதான். தவறு செய்வது எளிதுதானே. சமீபத்திய ஆண்டுகளில் ஃபெட்டியோக்கள் தமது வரம்பை அதிகரித்து ஓர் ஏக்கருக்கு எட்டு மெகாரீக்குள் அளவில் வாசனையை உற்பத்தி செய்துவருகின்றன. டெலிஃபோட்டோ லென்ஸ்கள் அதிகளவில் பயன்படுத்தப்படுவதே இதற்குக் காரணம் என்பதைச் சுட்டிக்காட்ட நான் கடமைப்பட்டுள்ளேன்.

வேற்றுகிரகத்தைச் சேர்ந்த அனைத்து விலங்குகளும் தாவரங்களும் விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டவை எனும் எண்ணத்தை உண்டாக்க நான் விரும்பவில்லை. நிச்சயமாக, கார்னிவாம்ப்ஸ், சாப்ரோப்ஹோய்ட்ஸ், கீக்லிங்க்ஸ், டெமெண்டேரியா, மார்ஷ்மக்கர்ஸ் போன்றவை விரும்பத்தக்கவை அல்ல. ஆட்டார்சியே குடும்பத்தைச் சேர்ந்த மைசோஃபிலிட்ஸ் (Gauleiterium flagellans, Syphonophiles pruritualis-யும் சேர்த்து), த்ரோட்டில்மோர் (Lingula stranguloides Erdmenglerbeyeri) ஆகியவையும் அபாயகர-மானவைதான். ஆனால், இவ்விஷயத்தை இன்னும் கவனமாகச் சிந்தித்து பார்த்து, நோக்கங்களை ஆராயுங்கள். ஒரு மனிதன் பூக்களைப் பறித்து மூலிகை கிடங்கில் அவற்றைக் காய வைப்பது சரியான செய்கை எனும்போது, தாவரங்கள் மனிதக் காதுகளைக் கிழித்து பாதுகாத்து வைத்துக்கொள்வது ஏன் இயற்கைக்குப் புறம்பானதாகக் கருதப்பட வேண்டும்? அனைத்து அளவீடுகளையும் தாண்டி, எக்கோலூன் (Echolalium impudicum Schuwamps) அய்டோனோக்ஸியாவில் பெருகியிருந்தால், இதற்கும் நாம் மனிதர்களைத்தான் குற்றம்சொல்ல வேண்டும். எக்கோலூன் தனது உயிரின் ஆற்றலை ஒலியிலிருந்தே பெறுகிறது. இடியோசையில் இருந்தே தனது உணவை அது உட்கொண்டது. இப்போதும்கூட புயல்களின் ஓசையைக் கேட்க அது விரும்புகிறது. ஆனால், இப்போது அது சுற்றுலாவாசிகளின் ஓசையைக் கேட்கிறது. ஒவ்வொரு சுற்றுலாவாசியும் எக்கோலூனைப் பார்த்து இழிவான சாபங்களைச் சரமாரியாகப் பொழிகிறார்கள். தன் மீது ஏவப்படும் கேளிக்கைச் சொற்களுக்கு மத்தியில் இந்த உயிரினம் மலருவதைப் பார்ப்பது மிகவும் வேடிக்கையாக உள்ளது எனவும் அவர்கள் சொல்கிறார்கள். அது உண்மையில் மலருகிறதுதான் என்றாலும், உற்சாகமான சுற்றுலா பயணிகளால் உச்சரிக்கப்படும் அவதூறுகளால் அது மலருவதில்லை. மாறாக, ஒலி அதிர்வுகளில் இருந்து உறிஞ்சப்படும் ஆற்றலின் காரணமாகவே அது மலருகிறது.

இவையெல்லாம் எதை நோக்கி செல்கின்றன? புளூ விஸம், டிரில்பீக்டு பார்பீட் போன்ற உயிரினங்கள் இப்போது அடியோடி மறைந்துவிட்டன. ஆயிரக்கணக்கான உயிரினங்கள் அழிவின் விளிம்பில் இருக்கின்றன. குப்பைக் கூலங்களின் அதிகரிப்பால் சன்ஸ்பாட்ஸ் அதிகரித்துவருகின்றன. எனக்கு இப்போதும் நினைவு இருக்கிறது. ஒரு குழந்தைக்கு அளிக்கப்படும் மிகப் பெரிய வாக்குறுதிகளில் ‘ஞாயிறன்று செவ்வாய் கிரகத்துக்கு அழைத்துச் செல்வேன்’ என்பது அற்புதமான ஒன்றாக இருந்தது. ஆனால், இப்போது அந்தச் சிறுவன் தனக்கே தனக்கென்று ஒரு சூப்பர்நோவாயை அவனுடைய தந்தை உருவாக்கித் தரவில்லை என்றால் தனது காலை உணவை உட்கொள்ள மாட்டான். அணுசக்தியை வீணடிப்பதன் மூலமாகவும் சிறுகோள்களையும் கிரகங்களையும் மாசுபடுத்துவதன் மூலமாகவும் பாதுகாக்கப்பட்டுள்ளவைகளை அழிப்பதன் மூலமாகவும் செல்லும் இடங்களில் எல்லாம் குப்பைகளை வீசுவதன் மூலமாகவும் விண்வெளியைச் சிதைத்து அதையொரு மாபெரும் குப்பை மேடாக நாம் மாற்றக்கூடும். அபாயங்களை உணர்ந்து சட்டங்களை அமல்படுத்துவதற்குரிய தருணம் இது. நாம் தாமதிக்கும் ஒவ்வொரு நிமிடமும் ஆபத்தானது என்பதை உறுதியாக உணர்வதால், உரக்கக் குரலெழுப்புகிறேன்: பிரபஞ்சத்தைக் காப்போம்.

ராம் முரளி <raammurali@gmail.com>

# ‘ஜெயிலர்’ வணிகமும் ரஜினியின் ஆன்மிக பயணமும்

## அ. இருதயராஜ்



ரஜினியின் ‘ஜெயிலர்’ வெளியாகி, திரையரங்கிலும் ஓடிடியிலும் அதைப் பார்த்து, அதுபற்றி பேசியும் எழுதியும் அனைவரும் ஓய்ந்துவிட்டார்கள். இனியும் இந்த திரைப்படத்திற்குள் சென்று விமர்சிப்பதற்கு பெரியதாக ஒன்றுமில்லைதான். ஆனால், இந்த படத்திற்கு பின்னால் இருக்கிற அரசியல், திட்டமிட்ட வணிகம், சூப்பர் ஸ்டார் போட்டி, வெற்றி பார்முலா என்பதை பற்றியெல்லாம் நாம் பேச வேண்டிய தேவை இருக்கின்றது.



ஜெயிலராக இருந்து ஓய்வு பெற்ற முத்துவேல் பாண்டியன் (ரஜினி) தன்னுடைய மனைவி, மகன், மருமகள், பேரப்பிள்ளையோடு அமைதியாகவாழ்ந்து வருகின்றார். இந்த சூழலிலும் அவரது குடும்பத்தை பழிவாங்க துடிக்கின்றார் வில்லன். இதனால், அவரது குழுவை தேடித்தேடி நூதன முறையில் தீர்த்து கட்டுகிறார்.

படத்தில் வில்லனாக வரும் மலையாள நடிகர் விநாயகம் சிலை கடத்தல் கும்பலின் தலைவராக இருக்கின்றார். கோயில்களில் சிலை திருடுவதையும் திருடிய சிலைகளை பாதுகாப்பதில் தொந்தரவாக இருப்பவர்களை கொடூரமாக கொல்வதையும் தன்னுடைய வாடிக்கையாக கொண்டிருக்கிறார்.

கதாநாயகனுக்கும் (ரஜினி) வில்லனுக்கும் (விநாயகம்) நடக்கின்ற மோதலும் அவர்கள் மாறி மாறிச் செய்கின்ற கொலைகளும்தான் மொத்த படம்.

ஒரு ஜெயிலராக இருந்து ஓய்வு பெற்ற முத்துவேல் பாண்டியன், தன்னுடைய குடும்பத்தினருடன் அமைதியான சூழலில்

வாழ்ந்தாலும், அவருக்குள் அவ்வளவு வன்முறை குடி கொண்டிருக்கிறது. தன்னுடைய பேரனை கொல்ல வந்த இரண்டு நபர்களை தலைவேறு, முண்டம் வேறு என்ற நிலையிலே கழுத்தை அறுத்து போடுகின்றார். மருமகளை அசிங்கமாக பேசியதற்காக இன்னொருவனை மிகவும் கொடூரமான முறையிலே கொல்லுகின்றார். பிளாஷ்பேக்கில் அவரை எதிர்த்து பேசியதாலயே ஒருவனுடைய காதை அறுக்கின்றார். அறுத்த காதை கையில வைத்துக்கொண்டு வசனம் பேசுகின்றார். இவ்வளவு கொடூரமாக மற்றவர்களை கொல்கின்ற மனிதன், எப்படி மென்மையான நபராக குடும்பத்திற்குள் வலம் வருகின்றார்?

திரைப்படம் நல்ல பொழுதுபோக்கு சாதனம், சமூக மாற்றத்திற்கான கருவி, மக்களை பண்படுவதற்கான ஊடகம் என்பதையெல்லாம் கடந்து, வியாபாரம் மட்டுமே என்கின்ற நிலைக்கு இன்று தள்ளப்பட்டுள்ளது. ஸ்டார் அந்தஸ்துள்ள நடிகர்களின் திரைப்படம் வெளியாகின்ற தேதியை குறித்த உடனேயே, குறிப்பிட்ட நாட்களில், அனைத்து திரையரங்குகளிலும் அந்தப் படம் மட்டும்தான் ஓடுகின்ற சூழல் உருவாக்கப்படுகிறது. எனவே, திரையரங்கு வளாகத்திற்குள் வருகின்ற ஒரு சினிமா பார்வையாளன், அவன் விரும்பிய படம் பார்ப்பதற்கு பதிலாக, அங்கு இருக்கின்ற படத்தை மட்டுமே பார்ப்பதற்காக கட்டாயப்படுத்தபடுகிறான். இது சமீப கால நவீன வியாபார யுக்தி. இதனால், ஒரு நல்ல படத்தை தேர்ந்தெடுத்து பார்ப்பதற்கும் மிக மோசமான படத்தை நிராகரிப்பதற்குமான வாய்ப்பு பார்வையாளர்களுக்கு மறுக்கப்படுகிறது. இப்படித்தான் 'ஜெயிலர்' உட்பட முன்னணி நட்சத்திரங்களின் படத்திற்கு வசூல் குவிக்கப்படுகிறது.

தமிழ் தவிர தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி ஆகிய நான்கு மொழிகளிலேயும் இப்படம் வெளியாகின்றது. அந்தந்த மொழி பேசும் மக்களை கவர்வதற்காக, அந்தந்த மொழிகளில் பிரசித்தி பெற்ற நடிகர்களை ஊறுகாய் போல இந்த படத்திலே பயன்படுத்தி இருக்கிறார்கள். தமிழ் மக்களை கவர்வதற்கு ரஜினி இருக்கிறார். அவருடன் நகைச்சுவை நடிகர் யோகி பாபுவும் இணைந்துள்ளார். மலையாள ரசிகர்களை கவர்வதற்காக மோகன்லால், விநாயகம்; கன்னட நடிகர்களை கவர்வதற்காக நடிகர் ராஜ்குமாரின் மகனான சிவராஜ் குமார், ஹிந்தி ரசிகர்களை கவர்வதற்காக ஜாபர் ஷரீப், தெலுங்கில் சுனில் ரெட்டி. இது வணிக ரீதியாக அம்மொழிகளில் இப்படத்தை வெற்றி பெற வைப்பதற்காக பயன்படுத்தப்பட்டு இருக்கின்றது. எப்படிப்பட்ட மோசமான கதையையும் ஒரு கதாநாயகப் பிம்பத்தின் பின்னணியில் வெற்றி படமாக மாற்றி விடலாம் என்ற கணக்கு.

'ஜெயிலர்' திரைப்படத்தின் திரையரங்க வசூல் மட்டும் 500 கோடிக்கும் மேல் என்று சொல்கிறார்கள். படத் தயாரிப்பு செலவு 250 கோடி என்றால் 250 கோடிக்கு மேல் லாபம். படத்தை ஓடிடி தளங்களுக்கு விற்ற வகையில் இன்னும் நூறு கோடி பணம் கிடைத்திருக்கும். தொலைக்காட்சி நிறுவனத்திற்கு விற்கின்றபொழுது அதிலே 50 கோடி கிடைக்கும்.

இந்த வியாபார வெற்றிக்குப் பின்னால், மேலே குறிப்பிட்டவற்றுடன் 'யார் சூப்பர் ஸ்டார்' என்று எழுப்பப்பட்ட போலி விவாதத்துக்கும் முக்கிய பங்கிருக்கிறது. 'ஜெயிலர்' படத்தில் வருகின்ற தொடக்கப் பாடலில், 'நான்தான் இங்க கிங்கு. நான் வச்சதுதான் ரூல்ஸ். அந்த ரூல்ஸ நான் நெனச்ச நேரத்துக்கு மாத்திக்கிட்டே இருப்பேன். அதைக் கேட்டு ஒழுங்கா நடந்தா இங்கே இருக்கணும். இல்லாட்டி உங்களை கிழிச்சு போட்டுருவேன். தலைவர் தான் களத்துல எப்போதும் சூப்பர் ஸ்டார். தலைவர் நிரந்தரம்" என்ற வரிகளை கேட்டிருப்போம்.

சரி, ரஜினி உண்மையான சூப்பர் ஸ்டார் ஆக இருக்கட்டும்; அல்லது தலைவராக இருக்க விரும்பட்டும். அப்படி தன்னை நினைத்துக்கொள்பவர் அதை உறுதிபடுத்தும் வகையில் இதுவரை என்ன செய்திருக்கின்றார்? தமிழ் சமூகத்தின் ஏற்றத்திற்கும் முன்னேற்றத்திற்கும் எத்தகைய முன்னெடுப்புகளை செய்திருக்கின்றார்?

தூத்துக்குடி ஸ்டெர்லைட் ஆலைக்கு எதிரான போராட்டத்தில் மக்கள் துப்பாக்கிச் சூட்டையும் பல உயிரிழப்புகளையும் சந்தித்தபோது, மருத்துவமனையில் குற்றுயிராய் படுத்திருந்த பாதிக்கப்பட்ட மக்களை பார்த்து, "இங்கே சமூக விரோதிகள் இருப்பதால்தான் இத்தகைய வன்முறை ஏற்பட்டது" என்று சொன்னார். யாரை சமூக விரோதி என்று சொல்லுகிறார் என்று கேட்ட விசாரணை அதிகாரியிடம், "எனக்கு தெரியாது" என்று பதில் சொன்னார்.

திரைப்பட வசனங்கள், பாடல் வரிகள் மூலமாக நான் அரசியலுக்கு வரப்போகிறேன், வந்துவிட்டேன் என்றெல்லாம் சொல்லி வருடக்கணக்காக ரசிகர்களை உசிப்பேற்றியவர், குறிப்பிட்ட காலக்கெடு நெருங்கியதும், நான் அரசியலுக்கு வரவில்லை என்று சொல்லிவிட்டார். அதனால், சோர்ந்துவிட்ட ரசிகர்களை உற்சாகப்படுத்த இப்பொழுது 'சூப்பர் ஸ்டார் யார்' என்ற போலி விவாதத்தை முன்னெடுக்கப்பட்டுள்ளது.

'ஜெயிலர்' படம் திரையரங்கில் வெளியானதற்கு மறுநாள் இமயமலைக்கு ஆன்மீகப் பயணம் மேற்கொள்வதாக சொல்லிவிட்டு சென்றார் ரஜினி. ரிஷிகேஷ், பத்ரிநாத், துவாரகா, பாபாஜி குகை, சுவாமி தயானந்த சரஸ்வதி ஆசிரமம் என பல இடங்களுக்கு சென்றார். இப்பயணத்தில் ஒரு ஆன்மீக உரையையும் நிகழ்த்தி இருக்கின்றார். இதனிடையே, ரஜினிகாந்தை பார்ப்பதற்காகவே தமிழ்நாட்டில் இருந்து இமய மலைக்கு இரண்டு மாதங்கள்



ரஜினிகாந்தும் உத்தரப் பிரதேச முதலமைச்சர் யோகி ஆதித்யநாத்தை சென்று பார்த்ததோடு அவருடைய காலில் விழுந்துவணங்கியதையும் எப்படிபுரிந்துகொள்வது?

யோகி, காவி உடையில் உள்ள ஒரு சாமிஜி அல்ல, வன்முறையை மனதிற்குள்ளே கொண்டிருக்கின்ற மிகக் கொடூரமான ஒரு முதலமைச்சர். அரசியல் சாசனத்தின் படி இந்தியா ஒரு மதசார்பற்ற நாடு என்றாலும், ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவர் அந்த மத அடையாளத்தோடு அரசு பதவிகளில் இருக்க முடியும்; இங்கு நாங்கள் வைத்தது தான் சட்டம் என்பதை சொல்லாமல் சொல்லியவர்.

முன்பாகவே புறப்பட்டு நடந்தே வந்த(!)ஒருரசிகனை இருகணைத்து புகைப்படம் எடுத்துகொண்டார். அவரை பாராட்டினார்.

இந்தியாவெங்கும் 'ஜெயிலர்' படம் ஓடிக் கொண்டிருக்கின்ற தருணத்திலே, இந்த ரசிகன் பயணம் உட்பட ரஜினியின் ஆன்மிக பயணம், ஒவ்வொருநாளும் செய்தியாகவெளிவந்துகொண்டே இருந்தது. இந்த செய்திகள் எல்லாம் அந்தப் படத்தை பிரபலப்படுத்துவதற்கு உதவியாக இருந்தது குறிப்பிடத்தக்கது. ரஜினி குறித்தும் 'ஜெயிலர்' படம் குறித்தும் ஓர் உரையாடலை வெகுஜன தளத்திலே தொடர்ந்து உயிர்ப்புடன் வைத்திருப்பதற்கு இந்த செய்திகளும் காரணமாக இருந்தன. ஆம், 'ஜெயிலர்' படம் பார்ப்பதற்கு மீண்டும் மீண்டும் மக்களை அழைப்பதற்கும் அதன் மூலம் வசூலை குவிப்பதற்கும் ரஜினியின் ஆன்மீகப் பயணம் குறித்த செய்திகள் பெருமளவுக்கு உதவின. படத்தை திரையரங்கில் சென்று பார்க்கமாட்டேன், ஓடிடி தளத்தில் வெளியாகும்போது பார்த்துக்கொள்கிறேன் என்று நினைக்கின்ற ஒரு சாதாரண மனிதன் கூட, சரி அப்படி இந்த படத்தில் என்னதான் இருக்கிறது என்றுபார்த்துவிட திரையரங்குக்குசெல்லவேண்டிய நிர்ப்பந்தத்தை இந்த செய்திகள் ஏற்படுத்தின.

படம் முழுவதும் வன்முறையை விதைத்துவிட்டு, காட்சிக்கு காட்சி ரத்தம் சொட்ட சொட்ட கொலை செய்துவிட்டு, எதற்கு இந்த ஆன்மீகப் பயணம்? ஆன்மீகம் ஒரு வாழ்க்கை நெறி என்றால், அதை திரைக்குள்ளும் திரைக்கு வெளியிலும் கடைபிடிப்பவன் தான் ஒரு நல்ல கலைஞன். ஆனால், ரஜினி, திரைப்படத்திற்குள் வன்முறையை ஆதரிப்பேன்; வெளியிலே ஆன்மீக பயணம் என்று நாடகம் போடுவேன் என்பதாக இருக்கிறார்.

சரி, ஆன்மீக தலங்களுக்கு புனித பயணம் மேற்கொண்டதை கூட ஏதோ ஒரு வகையில் புரிந்துகொள்ளலாம்.இந்த பயணத்தில் ரஜினியும் லதா

'ஜெயிலர்' இசை வெளியீட்டு விழாவில் ஏறக்குறைய ஒரு மணி நேரத்திற்கும் மேலாக பேசிய ரஜினிகாந்த் இறுதியிலே, "என்னிடம் குடிப் பழக்கம் மட்டும் இல்லை என்றால் நான் வேறு ஒரு ரஜினி ஆக இருந்திருப்பேன். இந்த சமூகத்திற்கு இன்னும் பல நல்ல காரியங்களை செய்திருப்பேன்" என்றார். இவருக்கு குடிப்பழக்கம் இருக்கிறதோ இல்லையோ இதுவரை தமிழ் சமூகத்திற்கு என்ன செய்திருக்கின்றார்?

தமிழ் திரைத்துறையில் ஏறக்குறைய 45 வருடங்களுக்குமேலாகஇயங்கிவருகின்றரஜினிகாந்த், அத்துறை லாபம் ஈட்டி தருகின்ற மிகப்பெரிய சாதனம் என்பதை நன்கு அறிந்திருக்கிறார் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அதன் மூலம் சம்பாதித்த பணத்தை வைத்து தமிழ்நாட்டிற்கும் இந்த பரந்தபட்ட சமூகத்திற்கும் என்ன செய்திருக்கின்றார் என்பதற்கு பதிலில்லை. தமிழ் சமூகத்தின் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் அவர் ஒன்றுமே செய்யவில்லை என்பதுதான் உண்மை.

எனவே,ரஜினியின் வெற்றுகோஷங்களை எல்லாம் கூர்மையாக விமர்சிக்க வேண்டியது அவசியம். அத்தகைய விமர்சனங்கள்தான், திரைத் துறையில் நல்ல கதைகளுக்கும் நல்ல இயக்குனர்களுக்குமான ஆதரவையும் ஊக்குவிப்பையும் வழங்கும். அதுதான் தமிழ் சினிமாவை தரமுள்ள சினிமாவாக மாற்றும். உலக அரங்கில் நல்ல திரைப்படங்களை எடுத்துச் செல்வதற்கான வாய்ப்புகளை உருவாக்கும்.

அ. இருதயராஜ் <iruraj2020@loyolacollege.edu>

# 8
# முயங்கோலிக் குறிப்புகள்

**கயல்**
**ஓவியம்: நடேஷ்**



## 22. இரவின் மணம்

மார்பில் தயங்கி
மிகச் சரியாக இடுப்பருகே சரியும் லினன் சேலை
ஏற்கனவே செவ்வரியோடும்
உதட்டில்
இன்னும் அழுத்தமாய்ச் சாயமேற்றி
மழையில் நனைந்த
இலைமறை கொய்யா
காற்றிலசைவதாக அலுவலகம்
செல்கிறவள்,
வீடேகி
வேலைகள் முடித்து
இரவு படுக்கையறை
நுழையும்போதோ
தினம் அணிகிற
பெரிய பூக்கள்போட்ட
அதே அழுக்கு நைட்டி.

அவன் மனதைப் படித்தவள்
ஏதும் பேசாமல்
எட்டி விளக்கணைத்திடுவாள்
விழிகளில்
பாதி உறக்கம் மீதமிருக்க
நிசியில்
அறையெங்கும் மணக்கத் தொடங்கும்
நிஷாகந்திகைப் பூக்கள்

## 23. சுருதி பேதம்

மலைகளின் உச்சியினின்றும்
முகடுகளில் இறங்கி
வளைவுகளில் பயணித்து
அடி வீழ்கிற
மழை பிடிக்கும் எனக்கு.
மொக்கு விகசித்து முழுதும் பூக்க
இரண்டாம் யாமம்வரை
காத்திருக்கும் நிஷாகந்தி
மீது பிரியம் எனக்கு.
இரத்தத் துளிகள் தரையில் தத்துவதாய்
பவளப்பூச்சிகளின் மென் நகர்வு



பார்க்க
அவ்வளவு ஆசை எனக்கு.
தேநீர் அருந்தவும்
கமழ்கிற மணம்
அதற்கென ஒரு நிறம்
அத்துடன்
மிடறு மிடறாக ருசிக்க
ஒரு மெல்லிய இருட்டு
தேடுமென் கண்கள்.
அவசரமாக ஏற்பாடான
சுயம்வரத்திலோ
உன்னிடம் நின்று பேசவும்
நேரவில்லை
நேரமுமில்லை.
எதையும் நேராகச்
சொல்லியே பழக்கம்
சுற்றி வளைத்துப் பேசத் தெரியாது
என்றுன் புகழைத்
தரகர் பாட
அருமை அருமை என்றனர்
அம்மை உட்பட
அத்தனை பேரும்.
பலன்,
இப்போதெல்லாம்
நான் ஸ்வரம் பாடத் தொடங்கும்முன்னே
நீ முடித்துவிட்ட
பேரியாழின் இசை கேட்டு
படுக்கை விரிப்பெங்கும்
பசியோடு சாவகாசமாய் நெளிகின்றன
வச்சிரதந்திப் புழுக்கள்.

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# ஹென்றி கிசிஞ்சர் 100
# பெரும் குற்றவாளி

**ரதன்**

மனிதன் நாகரீகமடைந்து, வளர்ச்சிகண்டு, கூட்டமாக அலைந்து, ஒருவர் தலைமை தாங்கி, பின்னர் அரசு, அரசன் என கட்டமைப்புக்கள் உருவாக்கப்பட்டபோது, மனித குழுவின் தலைமை அறத்துக்கு முக்கியத்துமளிக்கவில்லை. மாறாக தனது அரசுக்கு எது சாதகமானதோ அதனையே செய்து வந்தது. அரசியலுக்கு அறமேது?

இன்றும் ஐக்கிய நாடுகள் அமைப்பு உள்ளது. உலகின் பெரும்பாலான நாடுகள் அதில் அங்கம் வகிக்கின்றன. அப்படியிருந்தும் ஆக்கிரமிப்புகள் நடைபெறுகின்றன. சைப்பிரசில் இரண்டு நேட்டோ நாடுகள் களமிறங்கிய போது, அமெரிக்காவின் நிலைப்பாட்டிற்கான காரணம் குறித்து செனட்டில் எழுப்பப்பட்ட கேள்வி ஒன்றிற்கு ஹென்றி கிசிஞ்சர் பின்வருமாறு பதிலளித்தார்: 'சட்டத்தை விட தேசிய நலனே முக்கியம்.' (There are times when the national interest is more important I than the law)

அமெரிக்காவின் நடவடிக்கைகள் அனைத்தும் தேசிய நலனுக்காகவே செய்யப்படுகின்றன என பழமைவாதிகள் வாதிடுகின்றனர். அவ்வாறான ஒரு பழமைவாதியே ஹென்றி கிசிஞ்சர்.

1923இல் பிறந்த ஹென்றி கிசிஞ்சருக்கு கடந்த மே 27 நூறாவது வயது பூர்த்தியாகிவிட்டது. அமெரிக்காவின் மிகச் சிறந்த அரசியலறிஞர் என போற்றப்படுபவர். நிக்சன், போர்ட் ஆகிய ஜனாதிபதிகளுடனும் பின்னர் ஜோர்ஜ் டபிள்யு புஸ் உடனும் பணிபுரிந்தவர். ஜோர்ஜ் டபிள்யு புஸ் இவரை 9/11 விசாரணைக் குழுத் தலைவராக நியமித்திருந்தார். நிக்சன், போர்ட்ன் வெளிவிவகார அமைச்சராகவும் ஆலோசகராகவும் இருந்துள்ளார். நிக்சனுக்கு பின்னர் ஆட்சியல் அமர்ந்த ஜனாதிபதிகள் அனைவரும் இவருடன் தொடர்பிலிருந்துள்ளார்கள். ஆலோசனைகளையும் பெற்றுள்ளனர். டொனால்ட் ட்ரம்ப் விதிவிலக்கு. ட்ரம்ப் ஆலோசனைகளை கேட்காதவர்.

ஹென்றி கிசிஞ்சரின் சா(வே) தனைகளைப் பார்ப்போம்...

1.

1968இல் நிக்சனின் தேர்தல் பிரச்சாரத்துக்கு உதவி செய்யும் வகையில், அப்போதைய அமெரிக்க ஜனாதிபதி ஜோன்சன் வியட்நாமுடன் நடத்திய சமாதான பேச்சுவார்த்தைகள் பற்றிய விபரங்களை நிக்சனின் தேர்தல் பிரச்சாரக் குழுவிற்கு கிசிஞ்சர் தெரியப்படுத்தினார்.

ஜோன்சனின் சமாதான பேச்சுக்கள் வெற்றியளிக்குமாயின் நிக்சன் ஜனாதிபதித்தேர்தலில் தோல்வியடைவது ஓரளவிற்கு உறுதியாகவிருந்தது. நிக்சன், குடியரசுக் கட்சி சார்பாக போட்டியிட்டார். ஜனநாயகக் கட்சி சார்பாக ஜோன்சனின் அரசில் உதவி ஜனாதிபதியாக இருந்த ஹூபர்ட் ஹம்ப்ரி (Hubert Humphrey) போட்டியிட்டார்.

நிக்சன் தனது தேர்தல் பிரச்சாரங்களில், தான் வெற்றி பெற்றால் தெற்கு வியட்நாமுக்கு அதிகளவு உறுதிகள் வழங்குவேன் என பிரச்சாரம் செய்தார். தேர்தலில் வெற்றியும் அடைந்தார். 43.4 வீதங்களை நிக்சன் பெற்றிருந்த போதும் ஜனநாயகக் கட்சி உறுப்பினர் ஜோர்ஜ் வோலஸ்ம் சுயேட்சையாக போட்டியிட்டு 13.5 வீத வாக்குகளை பெற்றமை நிக்சனுக்கு சாதகமாக அமைந்தது.

வெற்றி பெற்ற நிக்சன் பதிவிக்கு வந்த சில வாரங்களிலேயே Breakfast Plan, Operating Menu ஆகிய இரகசிய பெயர்களைக் கொண்ட தாக்குதல்களை மேற்கொண்டார். ஹோ சி மின்னை இதன் மூலம் அடிபணிய வைக்கலாம் என்ற நோக்குடனேயே வட வியட்நாமின் விநியோகப் பாதைகள் அமைந்துள்ள கம்போடியா, லாவோஸ்-ன் பகுதிகளின் மீது தாக்குதல்களை மேற்கொண்டார். அமெரிக்காவின் விருப்பத்துக்கு அடிபணிய வைப்பதே நிக்சனின் நோக்கம். நிக்சனை இவ்வாறு செய்யுமாறு ஆலோசனை வழங்கியது ஹென்றி கிசிஞ்சர்.



கிசிஞ்சர் அப்போது ஒரு நிழல் ஜனாதிபதியாகவே செயல்பட்டார். இவர் ஆலோசனை வழங்கி மார்ச் 17, 1969இல் ஆரம்பிக்கப்பட்ட தாக்குதலில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பொது மக்கள் கொல்லப்பட்டனர்.

B-52 குண்டு வீச்சு திட்டத்தை 'நியுயோர்க் டைம்ஸ்' பத்திரிகை முதலில்



வெளியிட்டது. இதனைத் தொடர்ந்து கிசிஞ்சர் பத்திரிகைக்கு செய்திகளை அனுப்பியவர்களை தேடத் தொடங்கினார். இவரது அலுவலகத்தில் வேலை பார்த்தவர்கள் உட்பட பலரது தொலைபேசிகள் ஒட்டுக் கேட்கப்பட்டன. இதனைச் செய்யுமாறு கிசிஞ்சரே கூறினார் எனக் கூறப்பட்டது. இதனை நிக்சனும் அறிவார்.

2.

ஆர்ஜன்ரீனா, சிலே, உருகுவே. பரகுவே, பொலிவியா, பிரேசில், பெரு, ஈகுவடோர் போன்ற லத்தீன் அமெரிக்க நாடுகளிலும் மத்திய அமெரிக்க நாடுகளிலும், அமெரிக்க அரசினால், ஆபரேசன் கொன்டோர் (Operation Condor - Eliminating Marxist Subversion) செயல்படுத்தப்பட்டது. இடதுசாரி புத்திஜீவிகள், ஆதரவாளர்கள் ஒழிப்பே இதன் பிரதான நோக்கம். இடதுசாரி சார்பு அரசுகளை தூக்கியெறிந்து, அமெரிக்க சார்பு அரசுகளை ஆட்சியில் இருத்துவதன் மூலம், தொடர்ச்சியான சுரண்டல்களையும் அமெரிக்க செயல்படுத்தி வந்தது. ஜோர்ன்சன், நிக்சன், போர்ட், கார்ட்டர், ரீகன் ஆகிய ஜனாதிபதிகளின் ஆட்சிக் காலங்களில், அவர்களது ஆசியுடன் இந்த நடவடிக்கை இடம்பெற்றது.

ஆபரேசன் கொன்டோர் திட்டத்தின் மூலதாரி, கிசிஞ்சர் தான்.

கொன்டோருக்கு முன்பாக சிலியின் மக்களால் தெரிவு செய்யப்பட்ட இடதுசாரி அதிபர் சல்வடோர் அலெண்டேயை பதவியேற்காமல் செய்ய கிசிஞ்சர் முயன்றார்.

அலெண்டே தேர்தலில் வெற்றி பெற்ற பின்னர் அவரை சிலியின் காங்கிரஸ் அங்கீகரிக்க வேண்டும். கிசிஞ்சரின் ஆலோசனைப் படி, காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு லஞ்சம் கொடுத்து, அவர்களை அலெண்டேயின் வெற்றிக்கு எதிராக வாக்களிக்க தூண்டப்பட்டது. ஆனால், அதனை சாத்தியப்படுத்த முடியவில்லை. இரண்டாவது நடவடிக்கை, தீர்த்துக்கட்டுவது. Operation FUBELT என்பதே தீர்த்துக்கட்டும் நடவடிக்கைக்கு பெயர். இத்திட்டமும் வெற்றியளிக்கவில்லை. மாற்றுத் திட்டங்களை கிசிஞ்சர் சிந்திக்கத் தொடங்கினார்.

General René Schneider Chereau அமெரிக்காவின் திட்டத்துக்கு உடன்படாதால், அவரைக் கொலை செய்து இராணுவ புரட்சியை ஏற்படுத்தி, அலெண்டேயை ஜனாதிபதியாகாமல் செய்வதே அமெரிக்காவின் திட்டம். ஜெனரலும் கொலை செய்யப்படுகின்றார். பலி அலெண்டே ஆதரவாளர்கள் மீது சுமத்தப்படுகின்றது.

இதன் பின்னர் அமெரிக்க அரசு, சிலியில் மக்களால் தேர்வு செய்யப்பட்ட அதிபர் அலெண்டேயுடன் எந்தவித உறவுகளை மேற்கொள்ளாமல் கிசிஞ்சர் பார்த்துக்கொண்டார். இவரது ஆலோசனைகளின் பிரகாரம் நிக்சன் செயல்பட்டார்.

அலெண்டே 1973 செப்டம்பர் மாதம் கொலை செய்யப்பட்ட பின்னர் இராணுவத் தளபதி அகஸ்டோ பினோசெட் (Augusto Pinochet) ஜனாதிபதியானார்.

இவரது கொடுமையான ஆட்சிக்கு அமெரிக்கா ஆதரவாகசெயல்பட்டது. கிசிஞ்சர், 'இவர் இடதுசாரி போராளிகளுக்கு எதிராகவே செயல்படுகின்றார். கம்யூனிசத்தின் ஒரு பலிகடா இவர்' என்றார். மேலும், 'அலெண்டேயைக் கொன்றதன் மூலம் மேற்கிற்கு உதவி செய்துள்ளீர்கள்' எனவும் கிசிஞ்சர் தெரிவித்திருந்தார்.

1976 செப்டம்பர் 21 அலெண்டே ஆதரவாளரும் அகஸ்டோ பினோசெட்-ஐ எதிர்த்தவருமான சிலியின் முன்னால் அமெரிக்க தூதுவர் ஆர்லாண்டோ லெட்லியர் (Orlando Letelier), அமெரிக்க மண்ணில் வைத்தே சிலியின் இராணுவ ஆட்சியினரால் மோட்டார் வாகனமொன்றில் குண்டு வைக்கப்பட்டு கொல்லப்பட்டார். இக் கொலை நடைபெறுவதற்கு ஐந்து நாட்களுக்கு முன்னர் சிலியிலும் உருகுவேயிலும் உள்ள அமெரிக்க தூதுவர்கள் கொன்டோர் நடவடிக்கை பற்றிய எதிர்ப்பை தெரிவித்திருந்தனர்.

லெட்லியர், சிலி இராணுவ ஆட்சியினரால் கைது செய்யப்பட்டு சித்திரவதை செய்யப்பட்ட பொழுது இவரை விடுதலை செய்யுமாறு கோரியவர்களில் கிசிஞ்சர் குறிப்பிடத்தக்கவர். தொட்டிலையும் ஆட்டி பிள்ளையையும் கிள்ளிவிடுவதில் கிசிஞ்சர் கில்லாடி.

1954இல் பரகுவேயில், 1964இல் பிரேசிலில், 1971இல் பொலிவியாவில், 1973இல் உருகுவே, சிலேயில், 1975இல் பெருவில், 1976இல் ஆர்ஜன்ரீனாவில் அரசுகள் தூக்கியெறியப்பட்டு, அமெரிக்க சார்பு ஆட்சிகள் அமைக்கப்பட்டன.

ஒவ்வொரு தடவையும் அமெரிக்க அரசு மனித உரிமைகளை மீறும் அரசுகளுக்கு எதிராக சட்டங்களை இயற்றும் பொழுது கிசிஞ்சர் குறிப்பிட்ட நாடுகளை இதனுள் அடக்காமல் பார்த்துக்கொண்டார்.

3.

1971இல் பங்காளதேஷ் இன அழிப்பு நடைபெற்றது. இதற்கு மூலகாரணகர்த்தா அப்போதைய பாகிஸ்தான் ஜனாதிபதி முஹம்மது ஜாஜாக் கான் (Agha Muhammad Yahya Khan). இவர் முன்னால் இராணுவத் தளபதி. இவரது ஆட்சியை நிக்சன் - கிசிஞ்சர் தொடர்ந்து ஆதரித்து வந்தனர். ஜாஜாக் கான் அமெரிக்காவின் நல்ல நண்பன் என நிக்சன் கூறினார். இது பங்காளதேஷ் இனவழிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தபோது கூறப்பட்டது.

4.

இந்தோனேசியாவை 1968இலிருந்து 1998 வரை சுமார் முப்பது ஆண்டுகள் ஆட்சி செய்த ஜெனரல் சுக்காட்டோ, ஆட்சியைக் கைப்பற்றிய பின்னர், இடதுசாரிகளை ஒழித்துக் கட்டுவதில் மும்முரமாக செயல்பட்டார். இவரது கொடுங்கோல் ஆட்சிக்கு கிசிஞ்சர் - நிக்சன் ஆதரவு வழங்கினர். டிசம்பர் 1975இல் இந்தோனேசியா கிழக்கு ரிமோரைக் கைப்பற்றியது. சுமார் 24 வருடங்கள் இந்தோனேசியா கிழக்கு ரிமோரை ஆட்சி செய்தது. சுமார் இரண்டு லட்சம் ரிமோரியர்கள் கொல்லப்பட்டனர். இந்த ஆக்கிரமிப்புக்கு ஆதரவும் ஊக்கமும் கொடுத்தது, கிசிஞ்சர்.

5.

உலகையே ஆட்சி செய்த கிசிஞ்சர் அருகில் உள்ள கியுபாவை விட்டு வைப்பாரா?

கியுபாவின் இராணுவ, கடற்தளங்களை அழிக்க கிசிஞ்சர் கட்டளையிட்டார். எனினும் அமெரிக்காவால் கியுபா மீது கைவைக்க முடியாதிருந்தது. 1975 இலையுதிர் காலத்தின் போது அங்கோலாவிற்கு கியுபா தனது படைகளை அனுப்பி வைத்தது. அங்கு இடதுசாரிகள் அரசமைப்பதற்கு கியுபா உதவி செய்தது. இது கிசிஞ்சருக்கு கோபமூட்டியது. கஸ்ரோவை 'பிப்ஸ்கீக்' (Pipsqueak) எனத் திட்டினார். நமீபியா, சிம்பாவேயையும் கியுபா கைப்பற்றலாம் என கிசிஞ்சர் அச்சப்பட்டார். கஸ்ரோவை அழிக்க திட்டங்கள் தீட்டப்பட்டன.

கிசிஞ்சர் தொடர்ச்சியாக கியுபா மீது பொருளாதார அழுத்தங்களை சுமத்தினார். சர்வதேச சந்தையிலிருந்தும் சர்வதேசரீதியான பொருளாதார, அரசியல் தனிமைப்படுத்தல்களையும் கியுபா மீது அமெரிக்கா மேற்கொண்டது. கிசிஞ்சர் நிழல் ஆட்சி செய்த காலங்களிலேயே அதிகளவு அழுத்தங்கள் கியுபாவிற்கு அமெரிக்கா கொடுத்தது.

1984இல் ரீகன் ஜனாதிபதியாகவிருந்த போது U.S. National Bipartisan Commission on Central America அமைக்கப்பட்டது. இதன் தலைவராக ஹென்றி கிசிஞ்சரை ரீகன் நியமித்தார். 12 உறுப்பினர்கள் அடங்கிய அமைப்பு இது. 'மத்திய அமெரிக்காவில் அப்போது நடைபெற்றுக் கொண்டிருந்த போராட்டங்களின் பின்னால் கியுபாவும் சோவியத் யூனியனும் உள்ளன. அதனை கட்டுப்படுத்த வேண்டும். அமெரிக்கா நேரடியாகவே ஆயுதம், நிதியுதவியளித்து கியுப -சோவியத் சார்பு நிலைகளை மாற்றவேண்டும்' என இக்குழு தெரிவித்திருந்தது

இடதுசாரிகள் அரசுகளில் போராளிகளை அமெரிக்கா பலப்படுத்தியது; வலதுசாரிகள் அரசாட்சி செய்தால் போராளிகளை அழிக்க கிசிஞ்சரின் குழு ஆவண செய்தது.

6.

1972 - 1975 காலப் பகுதியில் கேர்ட்ஸ் போராட்டங்களை கிசிஞ்சர் ஊக்கப்படுத்தினார். குறிப்பாக ஈராக் பகுதிகளில் கேர்ட்ஸ்-ஐ தாக்குதல் மேற்கொள்ளத் தூண்டினார். மறுபுறத்தில் அமெரிக்க சார்பு ஈராக்கில் சதாம் உசைனின்

கோர்ட்ஸ் போராட்டங்களை நிர்மூலமாக்கினார். ஆயிரக்கணக்கில் கோர்ட்ஸ் போராளிகளும் மக்களும் கொல்லப்பட்டனர். கோர்ட்ஸ்ன் சுதந்திரப் போராட்டம் பின்தள்ளப்பட வேண்டும் என்பதில் கிசிஞ்சர் முனைப்பாகவிருந்து வெற்றியும் கண்டார்.

மத்திய கிழக்கில் சமாதானத்தை ஏற்படுத்தியவர் என ஹென்றி கிசிஞ்சர் போற்றப்படுகிறார். இஸ்ரேலுக்கும் எகிப்துக்குமான சமாதான பேச்சுவார்த்தைகள்,இஸ்ரேலுக்கும் சிரியாவிற்குமான பேச்சுவார்த்தைகள் இவர் அமெரிக்க அமைச்சராக இருக்கும் பொழுது ஆரம்பிக்கப்பட்டது. 1979இல் சினாய் பகுதியிலிருந்து இஸ்ரேல் வெளியேறியது. இஸ்ரேலை எகிப்து அங்கீகரித்தது. இதன் மூலம் சுயஸ் கால்வாயினூடாக பயணிக்கவும் முடிந்தது.

கிசிஞ்சர்,ஜேர்மனியில் ஒருபிறந்தஒருயூதர்.1954இல் ஹவார்ட் பல்கலைக் கழகத்தில் கலாநிதிப் பட்டம் பெற்றார். 18 நூல்களையும் எழுதியுள்ளார். இவரது நோக்கம் முழுவதும் இஸ்ரேல் சார்ந்தே இருக்கும். இவர் ஏற்படுத்திய சமாதானப் பேச்சுவார்த்தைகளின் விளைவு இன்று பார்க்கக்கூடியதாகவுள்ளது. அரபு நாடுகள் இஸ்ரேலுடன் நெருக்கமான உறவைக் கொண்டுள்ளன.பாலஸ்தீன நிலத்தில அமைக்கப்பட்ட இஸ்ரேல் படிப்படியாக தனது ஆக்கிரமிப்பினூடாக பாலஸ்தீனத்தை பெருமளவு கைப்பிடித்துவிட்டது. ஒருமித்த அரபு நாடுகளின் ஆதரவு பாலஸ்தீனத்துக்கு இருந்தது. இன்று, பாலஸ்தீனம் ஒரு தலையிடி என்று கூறுமளவிற்கு அரபு நாடுகள் சென்றுவிட்டது.

நிக்சனின் ஆட்சியின் போது சோவியத் யூனியனிலிருந்து யூதர்கள் வெளியேறுவதற்கும் கிசிஞ்சர் உதவி செய்தார். சோவியத் யூனியனில் யூதர்கள் கொல்லப்படலாம் என கிசிஞ்சர் கருதினார்.

வியட்நாம் போர் தோல்வியின் பின்னர் அமெரிக்காவிற்கு முக்கியமான நாடு சீனா என நிக்சன் கருதினார். 1972இல் சீனாவிற்கான விஜயத்தை நிக்சன் மேற்கொண்டார்.இதற்கு முன்பாக கிசிஞ்சர் சீனாவிற்கு சென்று அப்போதைய பிரதமர் சூ-என்-லாய்-ஐ சந்தித்தார். சீனாவில் நிக்சனுக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. சோவியத் யூனியன், சீன எல்லையில் இராணுவத்தை குவித்திருந்தது. மாவோ சற்று கலக்கமடைந்திருந்தார். கிசிஞ்சர் சரியான நேரத்தில் சீனாவுடன் உறவை ஏற்படுத்தினார். அமெரிக்காவுடனான உறவு அப்போது சீனாவிற்கு தேவைப்பட்டது.

ON China என்ற தனது நூலில் சீனாவின் முக்கியத்துவத்தைப் பற்றி கிசிஞ்சர் எழுதியுள்ளார். சீனாவின் சந்தையை எவ்வாறு கைப்பற்றுவது என்பதனைப் பற்றி கிசிஞ்சர் அறிந்திருந்தார். அதன் முதல் படியே அன்று கிசிஞ்சராலும் நிக்சனாலும் எடுத்து வைக்கப்பட்டது. பின்னர் தனது உரையாடல்களிலும், சீனாவுடன் எவ்வாறு அமெரிக்கா செயல்படவேண்டும் என கிசிஞ்சர் வெளிப்படுத்தியுள்ளார்.

ஊடகங்களை குறிப்பாக தொலைக்காட்சியை எவ்வாறு அமெரிக்க அரசுக்கு சாதகமாக பயன்படுத்த வேண்டும் என கிசிஞ்சர் தெரிந்து வைத்திருந்தார். அரசின் நடவடிக்கைகள், அராஜகங்கள் அனைத்தையும் அறத்தின் பெயரில் நிரூபிக்கக் கூடியவர். அதாவது பொய்யையும் மெய்யாக்கும் வல்லமை கொண்டவர்.தொலைப்பேசி உரையாடல்களை ஒட்டுக் கேட்கும் திட்டத்தை ஆரம்பித்து வைத்தவர். நிக்சனின் வோட்டர்கேட் பிரச்சினை காங்கிரசில் வெடித்தபோது, ஒட்டுக் கேட்பதனை பெரிய பிரச்சினையாக்கத் தேவையில்லை என்று கூறினார்.

இன்றைய அமெரிக்காவின் பல நடவடிக்கைகளுக்கு அன்றே அடித்தளமிட்டவர்,கிசிஞ்சர். அமெரிக்க அரசின் அமைச்சராக பதவி வகித்த போது அமெரிக்க பொருளாதார வளர்ச்சிக்கும் பல திட்டங்களை முன்மொழிந்தார். சர்வதேச ஒழுங்கை அமெரிக்காவே தீர்மானிக்க வேண்டும் என்பது கிசிஞ்சரின் கருத்தாகவும் செயலாகவுமிருந்தது. அமெரிக்க சார்பற்ற அரசுகளை மாற்றவேண்டும், இல்லையேல் அது அமெரிக்காவிற்கு பாதகமாக முடியும் என்ற கருத்தில் தெளிவாகவிருந்தார்.

பதவி வகித்த காலங்களிலும் ஆலோசகராகவிருந்த போதும் கிசிஞ்சர் நடவடிக்கைகளால் கொல்லப்பட்டவர்கள், இறந்தவர்கள் எண்ணிக்கை பல இலட்சங்கள். மேற்கின் நான்கு போர்க் குற்றவாளிகளுள் கிசிஞ்சரும் ஒருவர். ஏனையவர்கள் றொபட் மக்நமரா, புஸ், பிளேயர்.

வழமைபோல் அராஜகவாதியான கிசிஞ்சருக்கு 1973இல் நோபல் பரிசு வழங்கப்பட்டது. பொதுவாகவே விருதுகள் பொய்யானவர்களுக்கும் அராஜகவாதிகளுக்குமே வழங்கப்படுகின்றது. இதற்கு நோபலும் விதிவிலக்கல்ல.

சிலியின் அகஸ்டோ பினோசெட் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும்,விசாரிக்கவேண்டும் என ஐரோப்பிய நாடுகள் கோரிக்கை விட்டபோதும், அமெரிக்கா மவுனம் சாதித்தது. கிசிஞ்சரின் சர்வதேச நண்பர்கள் போர்க்குற்றவாளிகளாக தண்டனை பெற்ற போதும், விசாரிக்கப்பட்ட போதும்,பெரும் குற்றவாளி கிசிஞ்சர் அமெரிக்காவில் சுகமாக வாழ்ந்தார். நூற்றாண்டுகள் கடந்தும் அவர் தொடர்கின்றார். அமெரிக்காவும் வல்லரசாக நகர்ந்து கொண்டிருக்கின்றது.

ரதன் <rathan100@gmail.com>

# முகங்கள்

## அரவிந்தன்

ஓவியம்: **சைமன் ஹோல்டன்**

"ஹாய் மாலினி!"

"ஹாய் ஷங்கர்! வி.பி. உங்கள கூப்டார்."

"ஓ.கே."

ஷங்கர் நாற்காலியில் உட்கார்ந்து மடிக்கணினியைத் திறக்க ஆரம்பித்தான்.

"ஸிஸ்டம்லாம் அப்றமா ஆன் பண்ணிக்கலாம். மொதல்ல வி.பி.ய பாத்துட்டு வந்துடுங்க ஷங்கர். ஏதோ அர்ஜன்ட் போலருக்கு. மூணு வாட்டி இன்டர்காம்ல கூப்டுட்டாரு!"

"அவ்ளோ என்ன அவசரம்?"

"யாருக்குத் தெரியும்?" என்று தோள்களைக் குலுக்கிவிட்டுத் தன் வேலையைத் தொடர்ந்தாள் மாலினி. ஷங்கர் பத்து நிமிடங்கள்தான் தாமதமாக வந்திருந்தான். உட்காரவும் கூடாத அளவுக்கு என்ன அவசரம் என்று குழம்பியவனாக எழுந்து சென்றான்.

கதவை மெதுவாகத் தட்டிவிட்டு நழைவதற்குள் உள்ளேயிருந்து "கம், கம்..." என்று சத்தமாகக் குரல் கேட்டது. உள்ளே போனால் வி.பி. ராமச்சந்திரனுக்கு எதிரில் ஜே.எம்.டி. கருணாகரன் நாயர் உட்கார்ந்திருந்தார். இருவருக்கும் தனித்தனியாக "குட்மார்னிங் சார்" என்றான். "லேப்டாப் எங்க?" என்றார் ராமச்சந்திரன்.

"சார் நீங்க அவசரமா வரச் சொன்னதா மாலினி சொன்னாங்க..."

"யெஸ் ஷங்கர். அசவரம்தான். அதுக்காக வெறுங்கையோட வந்தா என்ன பேசறது? எல்லா ஃபிகர்ஸ் அண்ட் பேக்ட்ஸ் ஃபிங்கர் டிப்ஸ்ல வெச்சிருக்கீங்களா?"

"ஜஸ்ட் எ மினிட் சார். இதோ கொண்டுவந்துர்றேன் சார்."

"ஹரியப் ஷங்கர். டயமாச்சு. டென் தர்ட்டிக்கு நாங்க ரஹேஜா டவர்ஸ்ல இருக்கணும். இந்த ட்ராஃபிக்ல எப்படி போறதுன்னு கொஞ்சம் யோசிச்சி பாருங்க."

"தோ சார்..." என்று வெளியே ஓடினான்.



'சென்னைல டிராஃபிக் அதிகமா இருந்தா அதுக்கு நா என்னடா பண்றது வெண்ண' என்று மனதுக்குள் புலம்பியபடி ஓடினான்.

அவசரமாக ஓடி வந்தவனைப் பார்த்து மாலினி, "ஹே... என்ன இந்த ஓட்டம்?" என்றாள்.

"ஸ்போர்ட்ஸ் டே ஈவன்டுக்காக ப்ராக்டீஸ் பண்றன்" என்று சொல்லிவிட்டு லேப்டாப்பை எடுத்துக்கொண்டு விரைந்தான். 'குட் ஜோக்' என்று அவள் பதில் சொன்னது அவனுக்குப் பின்னால் மங்கலாகக் கேட்டது. லேப்டாப்பில் எவ்வளவு சார்ஜ் இருக்கிறது என்று தெரியவில்லை. பத்தரை மணிக்கு ரஹேஜா டவரில் இருக்க வேண்டுமென்றால் இங்கே 15 நிமிடங்களுக்கு மேல் பேச வாய்ப்பில்லை. 15 நிமிடங்கள் லேப்டாப் தாக்குப் பிடிக்கும்.

"கமான், ஸிட், ஸிட்..." என்றார் வி.பி. ராமச்சந்திரன். ஜே.எம்.டி. அமைதியாக உட்கார்ந்திருந்தார். மேஜை மீது லேப்டாப்பை வைத்து அதைத் திறக்கப் போனான்.

"இங்க பாருங்க ஷங்கர்" என்று ராமச்சந்திரன் தன்னுடைய லேப்டாப்பை அவர்களை நோக்கித் திருப்பினார். தானும் பார்க்க வசதியாகச் சற்றே தன் நாற்காலியை நகர்த்திக்கொண்டார். விசைப் பலகையைத் தன் மடி மீது வைத்துக்கொண்டு மவுசை வைத்து இயக்கினார். இரண்டும் தொலையுணர் கருவிகள் என்பதால் தூரத்திலிருந்தே இயக்கினார்.

திரையில் ஒரு பிபிடி பிரசன்டேஷன் ஓடியது. ஷங்கர் செய்ததுதான் அது. 100 கோடி மதிப்புள்ள புதிய திட்டத்திற்கான வரைவு அது. போன மாதமே அதைச் சமர்ப்பித்துவிட்டான். வாடிக்கையாளரிடமிருந்து பதில் எதுவும் வந்ததாகத் தெரியவில்லை. பதினைந்தாவது ஸ்லைடில் நிறுத்தினார். "படிங்க" என்றார். படித்தான்.

"இந்த எடத்துல கிளாரிட்டி இல்லன்னு கிளையன்ட் ஃபீல் பண்றாங்க" என்றார்.

"உங்க கிட்ட கேட்டுதானே சார் போட்டேன்..."

"நா சொன்னத நீங்க ஃபுல்லா அப்சர்வ் பண்ணிக்கல ஷங்கர். நானும் அவசரத்துல









டச் பண்ணாம அனுப்பிட்டேன். இப்படி ஒரு ஸில்லி மிஸ்டேக் பண்ணியிருப்பீங்கன்னு நான் எப்படி எதிர்பார்க்க முடியும்? நீங்க என்ன ஃபிரஷ்ஷரா?" என்றார் குரலைச் சற்றே உயர்த்தியபடி.

"சார்..." என்றான் தயக்கத்துடன்...

"நோ எக்ஸ்ப்ளனேஷன் ஷங்கர். ஐ ஆம் நாட் இன்ட்ரெஸ்டட் இன் எக்ஸ்க்யூஸஸ் அன்ட் எக்ஸ்ப்லனேஷன்ஸ். ஐ வான்ட் டெலிவரி. ஐ வான்ட் எஃப்லாலஸ் ட்ராஃப்ட். காட் மை பாயின்ட்?" என வெடித்தார்.

"சார்...."

"எதுவும் பேசாதீங்க. எம் மண்டையே வெடிச்சிடும்போல இருக்கு" என்று இரண்டு கைகளையும் காதுகளுக்கு மேல் வைத்து அழுத்திக்கொண்டார்.

அப்போது அவர் மடியிலிருந்து விசைப்பலகை கீழே விழுந்தது. எடுத்துக்கொண்டு நிமிரும்போது அவர் முகம் இன்னும் சிவந்திருந்தது. நல்லவேளை குனியும்போது கண்ணாடி கீழே விழவில்லை என்று ஷங்கர் நினைத்துக்கொண்டான்.

அந்த இடத்தில் என்ன மாற்றம் செய்ய வேண்டும் என்று விளக்கினார். முற்றிலும் புதிய அம்சங்களைச் சொன்னார். போன முறை இதைப் பற்றியெல்லாம் பேசவே இல்லை. ஆனால், "இந்த முறையாவது கரெக்டா பண்ணி ஈவினிங் எவ்வளோ நேரமானாலும் அனுப்பிட்டு போங்க" என்ற சொல்லும்போது ஷங்கரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. வி.பி. இன்று வழக்கத்துக்கு அதிகமாக விறைப்பும் முறைப்பும் காட்டுவதைப் பார்த்தால் நாயரிடம் நன்றாக வாங்கிக் கட்டிக்கொண்டிருப்பான் என்று தோன்றியது.

"நோட் த பாயின்ட்ஸ்" என்று ஒரு பேப்பரை எடுத்துக் கொடுத்தார். ஷங்கர் குறித்துக்கொண்டான்.

"சீக்கிரமா போய் வேலய ஆரம்பிங்க" என்றார். ஷங்கர் எழுந்துகொண்டான். அப்போது கருணாகரன் நாயர் அவனை நிமிர்ந்து பார்த்தார்.

"இது எவ்ளோ இம்போர்டெண்டுன்னு நிங்ஙள்க்கு மனசிலாகுதா?" என்று கேட்டார்.

"யெஸ் ஸார். ஷ்யூர் ஸார்" என்றான் படபடப்புடன்.

"பீ கேர்ஃபுள்" என்று சொல்லிவிட்டு எழுந்தார்.

"ராம், இத ஷங்கர் பண்றாரா அவங்க தாத்தா பண்றாரான்றதெல்லாம் எனக்குத் தெரியாது. ஈவ்னிங் ஐ நீட் திஸ். இட் ஈஸ் யுவர் ரென்பான்ஸிபிலிட்டி" என்று வி.பி.யைப் பார்த்துச் சொல்லிவிட்டு ஜே.எம்.டி. வேகமாக வெளியேறினார்.

ஷங்கர் பம்பியபடி இருக்கைக்கு வரும்போது மணி 10.45. ரஹேஜா டவர்ஸ் என்ன ஆயிற்று. என்ன எழவுக்காக லேப்டாப்பைக் கொண்டு வரச் சொல்லி மிரட்டினான். போனமுறை இதையெல்லாம் சொல்லாதது அவன் தப்பு. ஆனால், இப்போது என்னிடம் எகிறுகிறான். மாலைக்குள் எல்லாக் கணக்குகளையும் போட்டு அறிக்கையை முடிப்பது சாத்தியமே இல்லை. ஆனால், முடிக்காவிட்டால் கொட்டையை நசுக்கிவிடுவான். ஷங்கர் மனதுக்குள் புலம்பிக்கொண்டே வேலையைத் தொடங்கினான்.

"என்ன ஷங்கர், ஏதாவது ப்ராப்ளமா?" என்றாள் மாலினி.

"ப்ராப்ளம் இல்லாம நமக்கு என்னிக்கு விடிஞ்சிருக்கு?"

அந்தப் பையனும் பெண்ணும் ஒடுங்கியபடி நின்றிருந்தார்கள். சாலையோரத்தில் ஒரு காரும் அதன் பின்னால் ஒரு பைக்கும் நின்றிருந்தன. காரை பைக் இடித்திருப்பதற்கான அடையாளம் தெரிந்தது. வாட்டசாட்டமாக ஒரு ஆள் அந்தப் பையனைப் பார்த்து முறைத்துக்கொண்டும் திட்டிக்கொண்டும் இருந்தான். அனேகமாக அவன் அந்தக் காரை ஓட்டி வந்தவனாக இருக்கலாம். அவன் அந்தப் பையனை அடித்திருப்பான் என்பது தெளிவாகத் தெரிந்தது. சிவாவுக்குக் கோபம் வந்தது. அவர்களைச் சுற்றிலும்

சிறு கூட்டம் நின்றிருந்தது. காரை ஓட்டி வந்தவனின் பேச்சு ஆணித்தரமாக இருந்தது. யாரும் அவன் பேச்சில் குறுக்கிடவில்லை.

சிவா தன்னுடைய பைக்கை ஓரமாக நிறுத்திவிட்டு நான்கைந்து பேருக்கு போன் செய்தான். போனை பத்திரமாகப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு அந்தக் கூட்டத்தை நெருங்கினான். அந்தப் பையன் அருகே சென்று, "என்னப்பா பிரச்சினை" என்றான். போக்குவரத்து நெரிசலில் முன்னால் போன கார் திடீரென்று நின்றதில் தன்னால் கட்டுப்படுத்த முடியாமல் லேசாக இடித்துவிட்டதாகச் சொன்னான். அவர் முகவரி கொடுத்தால் நாளைக்கு வந்து பழுது பார்ப்பதற்கான பணத்தைத் தந்துவிடுவதாகச் சொன்னான். அதுவரை தன்னுடைய மொபைலை அவரிடம் தந்துவைப்பதாகவும் போலீஸ், பெற்றோர் என்ற விஷயத்தைப் பெரிதுபடுத்த வேண்டாம் என்றும் சொன்னான்.

"அடிச்சாரா?" என்று கேட்டான் சிவா. அந்தப் பையன் பரிதாபமாகத் தலையசைத்தான். அந்தப் பெண்ணும் கண்ணீர் கசியும் கண்களுடன் அதை உறுதிப்படுத்தினாள்.

சிவா கார் ஒட்டி வந்தவனைப் பார்த்துத் திரும்பினான். அவன் தன்னிடம் பேச்சுவார்த்தை நடத்துவான் என்று அவன் எதிர்பார்த்திருந்தான். சிவா அவன் கண்களை நேராகப் பார்த்து, "பையனை எதுக்காக அடிச்சீங்க?" என்று கேட்டான். தெளிவான உறுதியான குரலில் கேட்டான். அந்தக் கேள்வியை அவன் எதிர்பார்க்கவில்லை. "உன் வண்டிய இடிச்சிருந்தா சும்மா வுட்ருப்பியா?" என்றான். "எதுக்காக அடிச்சீங்க?" என்று மறுபடியும் கேட்டான். "வண்டிய ரிப்பேர் பண்ணாம இங்கேருந்து ஒரு இஞ்ச் நகர மாட்டேன்" என்றான் அவன். இளைஞனின் பைக் சாவி அந்த ஆளிடம் இருந்தது. "ஏன் அடிச்சீங்க?" என்றான் சிவா.

"நீ என்ன கேட்டதையே கேட்டுக்கிட்டு இருக்க? வண்டிய இடிச்சா அடிக்கத்தான் செய்வாங்க" என்றான் அந்த ஆள்.

"இடிச்சதுக்கும் அடிச்சதுக்கும் சரியா போச்சு. அந்த வண்டிய எப்படி ஸ்டார்ட் பண்றதுன்னு எனக்குத் தெரியும். உங்களுக்கு நயா பைசா கிடைக்காது" என்றான் சிவா.

"நீ என்ன பெரிய ரவுடியா இல்ல போலீஸா பஞ்சாயத்து பண்ண வந்துட்ட? இங்கோர்ந்து ஒரு அடி அந்தப் பையன் நகர முடியாது. நான் யார் தெரியுமா?" என்றான்.

"கொஞ்ச நேரத்துல அஸிட்டெண்ட் கமிஷனர் பேசுவாரு. அவர்கிட்ட நீ யாருன்னு சொல்லு" என்றான் சிவா. பிறகு நிதானமாக ஒரு சிகரெட் பற்றவைத்தான். "உனக்காச்சு, எனக்காச்சு. பாத்துரலாம்" என்றான். அதற்குள் அவன் அழைத்திருந்த நண்பர்கள் வந்தார்கள். கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. காவலர்கள் வந்தார்கள். பஞ்சாயத்து நடந்தது. பையனுடைய முகவரி, தொலைபேசி எண்ணை வாங்கிக்கொண்டார்கள். வண்டியைப் பழுதுபார்க்க நியாயமாக என்ன செலவு உண்டோ அதற்கு நான் உத்தரவாதம் என்றான் சிவா. அவனுடைய நண்பரும் காவல்துறை அதிகாரியுமான துரைசாமி காவலர் மூலம் அந்த ஆளிடம் தொலைபேசியில் பேசினார். இதைப் பெரிதுபடுத்த வேண்டாம் என்றார். அரை மணிநேரத்தில் விவகாரம் முடிந்து கூட்டம் கலைந்தது.

"இன்னிக்கு என்ன டிஃபன்?"

"இட்லி"

"நேத்துதான இட்லி பண்ணின? தினமும் எப்டி இட்லி சாப்புட்றது?"

"மாவு இருக்கு. இன்னிக்கு பண்ணலன்னா புளிச்சிபோயிடும்."

"மாவு புளிச்சா தோச ஊத்திருவியே, அப்புறம் என்ன?"

"இன்னிக்கு ஒரு நாள்தான?"

"என்னால முடியாது. நீங்கல்லாம் சாப்டுங்க. எனக்கு ரெண்டு சப்பாத்தி போட்டுக் குடு."

"உங்களுக்கு மட்டும் சப்பாத்தின்னா பசங்க கேக்க மாட்டாங்களா?"

"கேட்டா சுட்டு குடு."

"அப்ப இட்லி மாவ என்ன பண்றது?"

"கூடக்கூட பேசாத. எனக்கு இட்லி வேணாம். பசங்கள சமாளிக்கறது உன் தலவலி. நா ஏற்கனவே ஏகப்பட்ட டென்ஷன்ல இருக்கேன். கடுப்பேத்தாத."

".... ..... ....."

"என்னா முணுமுணுப்பு?"

"ஒண்ணுமில்ல"

'டேட்டிங் சர்வீஸ் வேண்டுமா? தொடர்புகொள்ளுங்கள்' என்ற செய்தி வந்திருந்தது. கூடவே ஒரு எண். நீண்ட யோசனைக்கும் தயக்கத்துக்கும் பிறகு பிரசாத் அந்த எண்ணை அழைத்தான். சிறிது நேரம் மணியடித்தது. பிறகு அழைப்பு துண்டிக்கப்பட்டது. ஐந்து நிமிடங்களில் அதே எண்ணிலிருந்து அழைப்பு வந்தது. "சொல்லுங்க சார், உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று ஒரு பெண் குரல் இந்தியில் கேட்டது. ஆங்கிலத்தில் பேச முடியுமா என்று இவன் ஆங்கிலத்தில் கேட்டான். சற்றே தடுமாற்றம் நிறைந்த ஆங்கிலத்தில் அந்தப் பெண் தொடர்ந்தாள்.

“உங்களுக்கு என்ன வேண்டும்?”

“இந்த எண்ணிலிருந்து ஒரு செய்தி வந்திருந்தது. டேட்டிங் சேவை தருவதாகச் சொன்னது.”

“ஆமாம் சார். நாங்கள் டேட்டிங் சேவை நிறுவனம் நடத்துகிறோம்.”

“என்ன சேவை வழங்குகிறீர்கள்?”

“எங்கள் நிறுவனத்தில் பதிவு செய்தால் நாங்கள் உங்கள் விருப்பத்திற்கேற்ற பெண்களின் தொடர்புகளைக் கொடுப்போம். நீங்கள் எந்த ஊரில் இருக்கிறீர்களோ அந்த ஊரில் இந்தச் சேவையைப் பெறலாம்.”

“சேவை என்றால்”

“உங்கள் விருப்பத்திற்கேற்ற பெண்ணைச் சந்திக்கலம். பேசலாம். வெளியில் போகலாம்.”

“அவ்வளவுதானா?”

“உடல் உறவும் வைத்துக்கொள்ளலாம்.”

பிரசாத்துக்கு மனம் பொங்கியது.

“எவ்வளவு செலவாகும்?”

“நாங்கள் உங்களுக்கு மேடம்களின் தொடர்பைக் கொடுப்போம். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கலாம். பணம் தர வேண்டாம்.”

“இலவசமாகவா?”

“பதிவுக் கட்டணம் உண்டு சார். மேடமுக்குப் பணம் தர வேண்டாம். அவர்கள் யாரும் பாலியல் தொழிலாளி கிடையாது. உங்களைப் போலத்தான்.”

“ஓ... அப்படியானால் எங்களுக்குத் தொடர்பு ஏற்படுத்தித் தருவதுதான் உங்கள் சேவையா?”

“ஆமாம் சார். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?”

“சென்னை.”

“சென்னையில் எங்களுக்கு நிறைய மேடம்ஸ் இருக்கிறார்கள். கல்லூரி மாணவிகள், திருமணமானவர்கள், விவாகரத்து ஆனவர்கள், விதவைகள் என்று பலர் இருக்கிறார்கள்.”

“நான் அடுத்த வாரம் ஹைதராபாத் போவேன். அங்கே இந்தச் சேவை கிடைக்குமா?”

“இந்தியா முழுவதும் கிடைக்கும் சார்.”

“பெண்களை நான் எப்படித் தேர்ந்தெடுப்பது?”

“இரண்டு மாதங்களுக்கு 2100 ரூபாய். வாரத்திற்கு இரண்டு மீட்டிங். பணம் கட்டினீர்கள் என்றால் உங்களுக்கு வாட்ஸப்பில் மேடம்ஸ் புகைப்படங்கள், விவரங்களை அனுப்புவோம். உங்கள் வாட்ஸப் எண் இதுதானே?”

“ஆமாம்.”

“அதில் வங்கிக் கணக்கு விவரங்களை அனுப்புகிறோம்.”

“மற்ற தகவல்களையும் சேர்த்து அனுப்புங்கள்.”

தொலைபேசியில் சொன்ன விவரங்களுடன் கூடுதலாகச் சில விவரங்களும் வந்தன. கணக்கு விவரமும் வந்தது. வாட்ஸப் செய்தியில் பணம் சம்பாதிக்கவும் வாய்ப்பு உண்டு என்று ஒரு வரி இருந்தது. அந்த எண்ணை மீண்டும் அழைத்தான்.

“சொல்லுங்க சார்?”

பிரசாத் தன்னுடைய சந்தேகத்தைக் கேட்டான்.

“எங்கள் தொடர்பில் சில மேடம்கள் இருக்கிறார்கள். அவர்களை நீங்கள் திருப்திப்படுத்தினால் பணம் தருவார்கள்.”

“எவ்வளவு?”

“5000, 10000....”

“ஓஹோ.....”

“சார், எப்போது பதிவு செய்கிறீர்கள்?”

“யோசித்துச் சொல்கிறேன்.”

“இவ்வளவு தூரம் விசாரித்துவிட்டு இப்போது இப்படிச் சொன்னால் எப்படி?”

“விவரம் தெரியாமல் முடிவெடுக்க முடியாது. விவரம் தெரிந்தாலும் உடனடியாக முடிவெடுக்க முடியாது. யோசிக்க வேண்டும்.”

“எவ்வளவு நாள் ஆகும் சார்?”

“இரண்டு வாரங்கள்.”

“இரண்டு வாரங்களா?”

“ஆமாம்.”

“சரி சார்.”

பிரசாரத்தின் மனம் பரபரக்க ஆரம்பித்தது. கல்லூரி மாணவிகள், இல்லதரசிகள், விதவைகள், விவாகரத்து ஆனவர்கள். அவனால் தான் கேட்டதையும் படித்ததையும் நம்ப முடியவில்லை. பெரிய இடத்துப் பெண்கள் சிலர் இதற்குப் பணமும் தருவார்கள். யார் கண்டது. இதுபோன்ற தொடர்புகள் ஆழமாகவும் உருவாகலாம். முயற்சி செய்து பார்த்தால் என்ன என்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால், கைப்பேசி, இணையம் ஆகியவை வழியாகப் பாலுறவு ஆசைகாட்டிப் பணம் பிடுங்கும் கும்பலைப் பற்றி அவன் நிறையவே கேள்விப்பட்டிருக்கிறான். பணம் கட்டுவதன் மூலம் தன்னுடைய வங்கிக் கணக்கு விவரம் அவர்களிடம் போய்விடும். வங்கிக் கணக்கிலிருந்து பணம் எடுக்கும் வித்தையும் அவர்களுக்குத் தெரிந்திருக்கும். சந்திக்க வரும் பெண்கள் நம்மைப் போல இல்லாமல் இந்த நிறுவனத்தின் ஆட்களாக இருக்கலாம். அவர்கள்

ஏதாவதுபடம்எடுத்துவைத்துக்கொண்டுமிரட்டலாம். உறவு வைத்துக்கொள்ளலாம் என்று கூட்டிப்போய் அந்த இடத்தில் நான்கைந்து பேர் சூழ்ந்துகொண்டு மிரட்டிப் பணம் பிடுங்கலாம். யூடியூப், இணையம் என்று மானத்தை வாங்கிவிடுவேன் என்று கூறி மிரட்டலாம். எப்படி நம்புவது?

இத்தனை சந்தேகங்களையும் தாண்டிப் பிரசாத்துக்குச் சபலம் எழுந்தது. என்னதான் ஆகிறது என்று பார்த்துவிடலாம் என்று நினைத்தான். ஆனாலும் பயம் நீங்கவில்லை. மாட்டிக்கொண்டால் பணம் போகும் என்பதோடு மானம் போகும். வீட்டிலும் மற்ற இடங்களிலும் அசிங்கப்பட வேண்டியிருக்கும்.

சபலமும் அச்சமும் அலைக்கழித்ததில் பிரசாத் குழம்பினான். தேவநாதனிடம் பேசலாம் என்று முடிவு செய்தான். தேவநாதன் முன்னணி ஊடகம் ஒன்றில் குற்றவியல் செய்திகளைக் கையாள்பவன். அவனிடம் யோசனை கேட்கலாம். ஆனால், தனக்கு என்று சொல்லி எப்படிக் கேட்பது?

நெடுநேரம் யோசித்த பிறகு ஒரு முடிவோடு தேவநாதனை அழைத்தான். "அர்ஜென்டா பேசணுமா?" என்றான் அவன். "இல்ல. எப்ப கூப்படலாம்?" "நானே எட்டு மணிக்கு மேல கூப்பட்றேன்."

தேவநாதன் ஒன்பது மணிக்குக் கூப்பிட்டான். கைப்பேசித்திரையில் அவன் எண்ணைப் பார்த்ததும் பிரசாத் எழுந்து வெளியில் வந்தான்.

"சொல்லு ப்ரோ" என்றான் தேவநாதன்.

"என்னோட டிஸ்டன்ட் ரிலேட்டிவ் ஒருத்தர். மிடில் ஏஜ். அவருக்கு ஒரு ப்ராப்ளம்" என்றான் பிரசாத்.

பிரசாத்தின் உறவினர் செந்தில்நாதனுக்கு விவாகரத்து ஆகிவிட்டது. மனைவி வேறொருவருடன் தொடர்பு வைத்திருந்தார். விவாகரத்துக்குப் பின் அவரையே கல்யாணம் செய்துகொண்டுவிட்டார். செந்தில்நாதனுக்கு வசதி இருக்கிறது. குழந்தைகள் இல்லை. மனதில் ஆசை இருக்கிறது. ஆனால், இன்னொரு திருமணம் செய்துகொள்ள விருப்பம் இல்லை. அப்போதுதான் தற்செயலாக டேட்டிங் சேவை நிறுவனம் பற்றித் தெரியவந்தது. ஆனால், நேரடியாகப் பணம் கட்டிச் சேர்ந்துகொள்ள பயமாக இருக்கிறது. ஏதாவது வம்பில் மாட்டிக்கொள்ளக் கூடாதே என்று பயப்படுகிறார். என்ன செய்யலாம்?

"அவருக்குதான் வசதி இருக்குல்ல? செக்ஸ் ஓர்க்கர்கிட்ட போக வேண்டியதுதானே?" என்றான் தேவநாதன்.

பாலியல் தொழிலாளியிடம் போவதென்றால் செலவு அதிகம் ஆகும். இவர்களோ இரண்டு மாதத்திற்கு 2100. அதில் 12 சேவைகள் என்கிறார்கள். அதில் சில பெண்கள் நமக்கே பணம் தருவார்களாம். இதைவிட்டுவிட்டுப் பாலியல் தொழிலாளியிடம் ஏன் பணம் செலவு செய்ய வேண்டும்?

"அதில்ல தேவா. அவருக்கு வேண்டியது செக்ஸ் மட்டுமல்ல. துணை. கம்பேனியன்ஷிப்."

"அப்படீன்னா கல்யாணம் பண்ணிக்க சொல்லு."

"அதுதான் வேண்டாம்னு முடிவோட இருக்காரே. இதோ பார் தேவா. அவர் கிட்ட நான் எல்லா ஆங்கிள்லயும் பேசிப் பாத்துட்டேன். அவரு இந்த ஆப்ஷன் பெட்டர்னு ஃபீல் பண்றாரு. நீ க்ரைம் ரிப்போர்ட்டரா இருக்கறதால உங்கிட்ட கேட்டு செய்யலாம்னு பாக்கறேன்."

"க்ரைம் ரிப்போர்ட்டரா இருக்கறதாலதான் இவ்ளோ கேள்வி கேக்கறேன். இன்னிக்கு செக்ஸ் இண்டஸ்ட்ரி மாதிரி பணம் பிடுங்கற இண்ட்ஸ்ட்ரி வேற எதுவும் இல்ல. டீன் ஏஜ் பசங்கள்லேந்து பல்லுபோன கெழவன்வரைக்கும் இதுல சிக்கி சின்னாபின்னமாயிருக்காங்க. லேடீஸும் இந்த மாதிரி முயற்சில இறங்கி மாட்டிட்டு முழிக்காறங்க. போன மாசம்கூட என் பழைய ஃப்ரெண்டு ஒருத்தி இதுமாதிரி சிக்கல்ல மாட்டிக்கிட்டா. சொசைட்டில நல்ல பொசிஷன்ல இருக்கா. எப்படியாவது இதுலேந்து காப்பாத்து தேவ்னு கெஞ்சினா. எப்படியோ பிரச்சினைய முடிச்சி குடுத்தேன்."

"அதுனாலதான் உங்கிட்ட வந்துருக்கேன்."

"உட மாட்டியே.... நீ நம்பர், மெசேஜ் எல்லாத்தையும் ஃபார்வேர்ட் பண்ணு."

எல்லாவற்றையும் அனுப்பிய பிரசாத் இந்த நிறுவனத்தின் மூலம் சந்திக்கக்கூடிய பெண்களைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தான். கல்லூரி மாணவிகள் வேண்டாம் என்று முடிவு செய்தான். 35 வயதான பெண்களில் இல்லத்தரசிகள், விதவைகள், விவாகரத்தானவர்கள் ஆகிய வகைமைகளிலிருந்து தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்திருந்தான்.

தேவா ஒரு வாரம் கழித்து அழைத்தான்.

"சொல்லு தேவா."

"இந்த பர்டிகுலர் கம்பெனிய பத்தி பெரிசா யாருக்கும் தெரியல. நம்பர போட்டா தகவல் எல்லாம் கரெக்டா வருது. ட்ரூ காலர் ஐடிய பாத்துட்டு அந்த நம்பரை செக் பண்ணிட்டுதான் கால் பண்றாங்கபோல. இதுவரைக்கும் இவங்கள பத்தி ரிப்போர்ட் எதுவும் வந்தா மாதிரி தெரியல. ஆனா அவங்க இவ்ளோ சீப்பா ஆஃபர் பண்றத பாத்தா சந்தேகம் வருது. அடுத்தடுத்த கட்டத்துல வேற வேற காரணம் சொல்லி கூடுதலா பணம் டிமாண்ட் பண்ணுவாங்கன்னும் சிலர் சொல்றாங்க. பண விஷயத்துல ரிஸ்க் எடுக்கத் தயாரா இருந்தா உங்க ரிலேட்டிவ எக்ஸ்பெரிமென்ட் பண்ண சொல்லு. அவர் நம்பர், ஆல்டர்னேட்டிவ்

நம்பர் எல்லாம் எங்கிட்ட குடு. எதுனா பிரச்சின வந்தா பாத்துக்கலாம். டேட்டிங்ன்றது இல்லீகல் இல்லன்றதுனால போலீஸ்கிட்ட போறதுக்கு பிரச்சன எதுவும் இருக்காதுன்னு நெனைக்கறேன்."

"தேங்ஸ்தேவா. நான் அவர்கிட்ட சொல்லிடறேன்."

இன்னமும் பிரசாத்துக்கு முழு தைரியம் வரவில்லை. எல்லாம் சரியாக அமைந்தால் அதிருஷ்டம்தான். தவறாகிப் போனால் என்ன செய்வது? பிரச்சினை வந்தால் தேவாவிடம் என்ன சொல்வது? பதிவுசெய்த பிறகு வேறொரு காரணம் சொல்லிப் பணம் கேட்டால் என்ன செய்வது?

பிரசாத் நெடுநேரம் யோசித்தான். ராத்திரிக்கு என்ன டிபன் வேண்டும் என்ற கேட்ட மனைவியிடம் எரிந்து விழுந்தான். தொலைக்காட்சியை சத்தமாக வைத்து மேட்ச் பார்த்துக்கொண்டிருந்த மகனைத் திட்டினான். பிறகு ஒரு திட்டம் தீட்டினான்.

செந்தில் பயப்படுகிறார். அவருக்காக நானே அந்த நிறுவனத்தைத் தொடர்புகொண்டு பதிவுசெய்துகொள்ளப்போகிறேன். முழுமையாக விவரம் அறிந்துகொண்டு அவருக்குச் சொல்லப்போகிறேன். இதில் எனக்கு ஏதாவது பிரச்சினை வந்தால் நீதான் பார்த்துக்கொள்ள வேண்டும்.

தேவாவுக்கு இது பிடிக்கவில்லை. "தேவையில்லாத வேலைல எறங்கற. வார்ன் பண்ணிட்டேன். அப்புறம் உன் இஷ்டம்."

"செந்தில்நாதன் எனக்கு ரொம்ப வேண்டியவர் தேவா. அவருக்காக இந்த உதவிய நான் செஞ்சிதான் ஆகணும்."

"என்ன ஆச்சு மாலினி, இன்னிக்கு ரொம்ப நேரமா உக்காந்துருக்கீங்க?"

"அதஏன் கேக்கறீங்க ஷங்கர்.... ஒரு அசைன்மென்ட் முடிக்கணும். அது முடியாம ஜவ்வு மாதிரி இழுக்குது. என்ன பண்றதுன்னு தெரியல."

"கட்டைய எடுத்து சட்டுனு மாட்டி ஸ்க்ரூ பண்றா மாதிரிதானே உங்க அசைன்மென்ட் எல்லாம் இருக்கும். கட்ட எப்படி ஜவ்வா மாறிச்சி?"

"அட போங்கப்பா. ஜோக்கெல்லாம் கேக்கற மூட்ல இல்ல. அடுத்த மாசம் எம் பையனுக்கு டென்த் எக்ஸாம் ஆரம்பிக்குது. அவனோட ஒக்காரணும். இந்த அசைன்மென்ட் முடிச்சிட்டா ரெண்டு வாரம் லீவு போடலாம்னு இருக்கேன்."

"அதுல என்ன பிரச்சனன்னுதான் கேக்கறேன்."

"ட்ரெய்னீ ரெக்ரூட்மென்ட் ஸ்கீம் ஒண்ணு போயிட்டு இருக்குல்ல? அதுக்கான ஸ்ட்ராட்டஜி பிளானிங் பண்ணணும்னு வி.பி. குடுத்தாரு. போன வருஷம் பண்ணினா மாதிரி பண்ணி குடுத்தேன். இந்த வருஷம் பார்ட்னர்ஸ் அதிகமா சேந்துருக்காங்க, ட்ரெய்னிங் மாட்யூலும் மாறுது, ட்ரெய்னீஸ அப்சார்ப் பண்ற பாலிசிலயும் சேஞ்ச் இருக்குன்னு சொல்லி ரீவொர்க் பண்ண சொல்லிட்டான். இந்த எழவையெல்லாம் முன்னாலயே சொல்லியிருக்கக் கூடாதா சனியன் புடிச்சவன். டீடெய்ல்ஸ் கேட்டேன். பார்ட்னர்ஸ் கிட்டேந்து வந்த மெய்ல்ஸ், ஹெச்.ஆர். கம்யூனிகேஷன்ஸ் எல்லாத்தையும் அனுப்பிட்டான். இப்ப அதையெல்லாம் பாத்து டீட்டெய்ல்ஸ் எடுக்கணும். அதுதான் பேசிக் டேட்டா. அப்புறம் அதை ப்ராசஸ் பண்ணணும். அதுக்கப்புறம் ஸ்ட்ராட்டஜி அவுட்லைன் குடுக்கணும்."

"சிக்கல்தான். நீங்கள் ஒண்ணு பண்ணுங்க. டீட்டெய்ல்ஸ் எடுத்து பென்ட்ரைவ்ல எங்ககிட்ட குடத்துருங்க. மெயில்ல அனுப்பினா ரெக்கார்ட் ஆயிடும். பென்ட்ரைவ்ல குடுங்க. நான் வீட்டுக்கு எடுத்துட்டு போய் ப்ராசஸ் பண்றேன். எடுக்க எடுக்க குடுத்துடுங்க. நான் டக்குனு முடிச்சிடுவேன். நீங்க அப்புறமா ஒரு வாரத்துல ஸ்ட்ராட்டஜி அவுட்லைன் போட்டுரலாம்."

"நெஜமாவா சொல்றீங்க ஷங்கர்? உங்களுக்கு டயம் இருக்குமா?"

"நைட்லதான் பண்ணபோறேன். ஒருவாரம் ஓடிடி பக்கம் போகாம இருந்தா போச்சு. அப்புறம் சேத்துவெச்சு பாத்துக்கலாம்."

"தேங்ஸ் ஷங்கர்."

"இட்ஸ் ஓகே. டீட்டெய்ல்ஸ் எடுங்க மொதல்ல."

ஷங்கர் கிளம்பினான். "டயமாயிடிச்சே மாலினி, உங்களை டி.நகர்ல ட்ராப் பண்ணட்டுமா?"

"அஞ்சு நிமிஷம் வெயிட் பண்றீங்களா?"

"நான் வண்டிய எடுத்துட்டு மெயின் கேட் பக்கத்துல நிக்கறேன். வந்துடுங்க."

மாலினி தனசேகரை அழைத்தாள். "நீ நேரா வீட்டுக்கு வந்துரு. என்னை என் கலீக் ட்ராப் பண்ணிடுவாரு."

"யாரு? மாதவனா?"

"இல்ல. அவர் எப்பவோ ரிசைன் பண்ணிட்டாரு. இது ஷங்கர். நைஸ் கய்."

"ஓ... ஃபைன்... சரி, பை...."

"வெயிட், வெயிட். லீவு போட முடியாதுன்னு சென்னேன்ல, இப்ப போட முடியும்னு தோணுது. தேங்ஸ் டு ஷங்கர். ட்ரெய்னீ ஸ்கீம்ல அவர்தான் ஹெல்ப் பண்றாரு. சீக்கிரம் முடிச்சிடலாம்னு நெனைக்கறேன்."

"ஓ... பரவால்லியே..."

"யா. நைஸ் கய். லேடீஸ்க்கு ஹெல்ப் பண்ணிட்டு ஏதாவது ஒரு விதத்துல அட்வான்டேஜ் எடுக்கற

டைப் இல்ல. ஸோ, நோ வொரீஸ்...”

“சூப்பர் சூப்பர்... சரி வா, வீட்ல பேசிக்கலாம்... பை...”

“பை...”

“மூர்த்தி, ஃப்ரீயா இருக்கியா?”

“ஒர்க் போயிட்ருக்கு சார். பரவாயில்ல சொல்லுங்க.”

“காஃபி சாப்படலாமா?”

“ஷ்யூர் சார். கான்டீனுக்கு வந்துரவா?”

“கான்டீன் வாணாம். அங்க நம்ல கம்பெனி ஆளுங்க எதிர்ல எதுவும் பேச முடியாது. நீ எதிர்க்க இருக்கற டீக்கடைக்கு வந்துரு.”

“சரி சார்.”

ஷங்கர் கிளம்பினான். அந்த டீக்கடையில் மாலை அருமையான சட்னியுடன் சுடச்சுட போண்டா பஜ்ஜி வகையறாக்கள் கிடைக்கும். ஆளுக்கு ஒரு தட்டு போண்டா வாங்கிக்கொண்டு ஓரமாக வந்தார்கள். அக்கம்பக்கத்து அலுவலகங்களில் பணிபுரியும் பலரும் தத்தமது அலுவலகங்களில் டீ, காபி, நொறுக்குத் தீனி வகையறாக்கள் கிடைத்தாலும் இந்த டீக்கடைக்கு வந்து போண்டா, பஜ்ஜி, வடை என்று எதையாவது சாப்பிட்டு டீ குடிப்பது வழக்கம். ஷங்கர் ஐந்து ஆண்டுகளாக இந்தக் கடையின் வாடிக்கையாளர். நாளுக்கு நாள் கடையின் வியாபாரம் வளர்வதைப் பார்த்துவருகிறான். ‘டீயும் பஜ்ஜியும் வித்தே கோடீஸ்வரனாயிருப்பான். எதையெதையோ படிச்சி கிழிச்சி நாம என்ன சம்பாரிச்சிட்டோம்‘ என்று நினைத்துக்கொள்வான்.

“சொல்லுங்க சார்...” என்றான் கிருஷ்ணமூர்த்தி.

“போன வாரம் கம்பெனி விஷயமா பேங்ளூர் போயிருந்தல்ல?”

“ஆமா சார். ட்ராவல் ரிப்போர்ட், அக்கவுண்ட்ஸ் எல்லாம் சப்மிட் பண்ணிட்டேன்.”

“பாத்தேன். ரிப்போர்ட்டை மேல அனுப்பிட்டேன். அக்கவுன்ட் ஸ்டேட்மென்ட்ல இன்னும் சைன் பண்ணல.”

மூர்த்தியின் முகம் மாறியது. “ஏன் சார், ஏதாவது ப்ராப்ளமா? கணக்கெல்லாம் கரெக்டாதானே குடுத்துருந்தேன்...”

“அதுதான் ப்ராப்ளம்.”

மூர்த்தி குழம்பினான். ஷங்கர் தொடர்ந்தான்.

“டூர் போயிட்டு வந்த பிறகு உன் கைல எவ்ளோ நின்னுது?”

“புரியல சார். எங் கையலயா... ஒண்ணுமில்ல சார்.”

“மூர்த்தி, நீ இந்த கம்பெனில சேந்து எவ்ளோ நாள் ஆகுது?”

“ரெண்டு வருஷம் ஆகப்போகுது சார்.”

“நான் வந்து ஆறு வருஷம் ஆகுது. இந்த கம்பெனிய பத்தி உன்னவிட எனக்கு நல்லா தெரியும்.”

“ஆமா சார். நீங்க சீனியர்...”

“என்ன மயிறு சீனியர்.... எப்பவும் சீட்டுல ரெண்டு ஊசிய சொருகி வெச்சிருக்கான் அந்த வி.பி. பாத்து பாத்து ஒக்கார வேண்டியிருக்கு. கொஞ்சம் அஜாக்ரதயா இருந்தாலும் குண்டி பழுத்துரும்.”

மூர்த்தி ஒன்றும் பேசவில்லை.

“இவனுங்க கோடிக்கணக்கா சம்பாரிக்க எத்தனையோ டகால்டி வேல பண்றாங்க. பல டுபாகூர் வேலைகளுக்கு நானும் என்னப்போல நெறய சீனியர்ஸும் உடந்தை. எங்களுக்கு என்ன குடுக்கறான்? எல்லாத்தையும் அவனே உட்டுக்குறான். நமக்கு சீட்டுல ஊசிய சொருவி எப்பவும் டென்ஷன்ல வெக்கறான். இவனா எதுவும் குடுக்க மாட்டான். நாமாதான் எடுக்கணும்.”

“புரியல சார்...”

காலியான தட்டை எடுத்துக்கொண்டு ஷங்கர் நடந்தான். அதைத் தொட்டியில் போட்டுவிட்டுக் கை கழுவிக்கொண்டு டீ போடும் இடத்துக்குப் போனான். மூர்த்தியும் பின்தொடர்ந்தான்.

டீ வாங்கிக்கொண்டு மறுபடியும் ஓரமாக வந்து நின்றார்கள். மூர்த்தி அடிக்கடி கண்ணாடியைச் சரிசெய்துகொண்டே ஷங்கரின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

“கணக்கெல்லாம் கரெக்டா குடுக்க கூடாது. கம்பெனிக்காக ரெண்டு நாள் டூர் போனா நம்ம கைல ரெண்டாயிரம், மூவாயிரம் நிக்கணும். எப்டி கணக்க எழுதறதுன்னு நான் சொல்லித்தரேன். வேற ஸ்டேட்மென்ட் குடு.”

“சார்... இது தப்பில்லயா சார்...”

“ஒரு மயிறும் தப்பில்ல. அவன் நம்பள தினமும் சூத்தடிக்கறான். நாம என்னிக்கோ ஒருநாள் திருப்பி அடிக்கறோம். இவுனுக்கெல்லாம் இதுதான் சரி. இன்னும் கொஞ்ச நாள் போனா நீயே தெரிஞ்சிப்ப. போனவாட்டி அப்ரைசல்ல உனக்கு எவ்ளோ குடுத்தான்?”

“ஒண்ணுமேயில்ல சார். ரொம்ப கம்மி.”

“பாத்தியா. நீ மாடு மாடு மாரி உழைக்கற. அவன் உன்ன குப்புற படுக்கவெச்சி சூத்தடிக்கறான். நீயும் காட்டிகினே இருப்ப. ஒருநாள் சூத்து புண்ணாயிடுச்சின்னு அழுவ. மருந்து போடறதுக்காவது பணம் வேணாமா?”

மூர்த்தி பரிதாபமாகப் பார்த்தான்.

"ரொம்ப யோசிக்காத. இந்த ஆபீஸ்ல எம்.டி. வெரிக்கும் இததான் பண்றானுங்க. எல்லாத்தையும் பாத்துட்டுதான் நான் இந்த முடிவுக்கு வந்தேன். மூவாயிரம் ரூபா உனக்கும் எனக்கும் பெருசு. கம்பெனிக்கு அது பிச்சக்காசு. நமக்கு தர வேண்டியத அவன் நியாயமா தர்ரதில்ல. நம்ம இப்டி எட்த்துக்க வேண்டித்தான். நீ ஏழு மணிக்கு மேல சீட்டுக்கு வா. எப்டி கணக்கு எழுதறதுன்னு சொல்லித்தரேன்.

மூர்த்தி தயக்கத்துடன் தலையாட்டினான். ஷங்கர் பணம் கொடுப்பதற்காகக் கல்லாவுக்குச் சென்றான்.

சிவா எலியட்ஸ் கடற்கரை அருகே உள்ள சிறிய பழரசக் கடைக்குப் போய்ச் சேர்ந்தபோது இரவு மணி பத்து இருக்கும். கடை மூடியிருந்தாலும் கடையின் பெயர்ப் பலகை பளிச்சென்று தெரியுமளவுக்குப் பலகைமீது ஒரு விளக்கு ஒளிர்ந்துகொண்டிருந்தது. பைக்கை நிறுத்திவிட்டுக் கைப்பேசியின் கூகிள் வரைபடத்தை மூடிவிட்டு சிவா அந்தக் கடைவாசலை நெருங்கினான். மகேஷும் அவன் காதலி ஆஷாவும் கையைக் கட்டியபடி ஓரமாக நின்றிருந்தார்கள். மகேஷ் 'ஏண்டா லேட்டு" என்பதுபோல ஒரு பார்வை பார்த்தான். காவல் அதிகாரியைப் பார்த்து சிவா, "ஸாரி சார், இவங்க வீட்டுக்குப் போய் டாகுமெண்ட்ஸ் கலெக்ட் பண்ணிட்டு வர லேட்டாயிடிச்சு" என்று மகேஷுக்கும் சேர்த்து பதில் சொன்னான். ஆஷா கையில்லாத டி-ஷர்ட்டும் கணுக்காலுக்கு மேல் ஏறிய இறுக்கமான ஜீன்ஸும் போட்டிருந்தாள். மருட்சியோடு சிவாவின் கண்களை ஒருமுறை பார்த்துவிட்டுக் கண்களைத் தாழ்த்திக்கொண்டாள்.

சிவா காவல்துறை அதிகாரியிடம் அமைதியாகவும் நிதானமாகவும் பேசினான். அதிகாரி மகேஷின் வண்டிக்கான ஆவணங்கள், அவனுடைய அடையாள அட்டை ஆகியவற்றைப் பார்வையிட்டார். சிவா அங்கே வருவதற்கு முன்பே சிவாவின் நண்பரான காவல்துறை அதிகாரி இந்த அதிகாரியை அழைத்துப் பேசிவிட்டதால் பிரச்சினை எதுவும் ஆகவில்லை.

"உங்க ஃப்ரெண்ட கூப்டுங்க" என்றார் அதிகாரி.

சிவா, மகேஷை அழைத்தான். ஆஷாவும் உடன் வந்தாள்.

"இவ்வளோ நேரத்துக்கு மேல இந்த மாதிரி எடத்துக்கு ரெண்டு பேர் மட்டும் தனியா வர்ரது சேஃப் கிடயாது. பெரிய ஆபீஸ்ல வேல பாக்கறீங்க. படிச்சிருக்கீங்க. இந்த சிம்பிள் மேட்டர் உங்களக்குத் தெரியாதா? இங்க ஒரு மாசத்துக்கு எவ்ளோ சம்பவம் நடக்குது தெரிமா? லவர்ஸ் தனியா இருக்கணும்னு இங்க வராங்க. அவங்க தனியா வருவாங்கன்னு தெரிஞ்சே ரவுடீஸ் அவங்கள டார்கெட் பண்றாங்க. ஏதாவது ஆகியிருந்தா என்ன பண்ணியிருப்பீங்க? ஏம்மா, உனக்காவது தெரிய வாணாம்? அதுல வேற இவரு எந்த டாகுமெண்ட்டும் இல்லாம ட்ராவல் பண்றாரு. லைசன்ஸ் இல்லாம வண்டியே எடுக்கக் கூடாது. உங்க பேக்ரவுண்ட பாத்துதான் உடறேன். இனி இந்த மாதிரி பண்ணாதீங்க" என்றார்.

மகேஷும் ஆஷாவும் நன்றியோடு தலையசைத்தார்கள். மகேஷ் அதிகாரியிடம் "தேங்க் யூ சார்" என்று கை கொடுத்தான். அவர் மிடுக்கோடு கை குலுக்கிவிட்டு, "பத்ரமா போங்க" என்றார். சிவா, "தேங்க்யூ சார்" என்று கை குலுக்க முன்வந்தபோது, "நீங்க லைசன்ஸ் வெச்சிருக்கீங்களா?" என்று அதிகாரி கேட்டார். அவர் பக்கத்தில் நின்றிருந்த காவலர் மெலிதாக முறுவலிப்பதை சிவாவால் பார்க்க முடிந்தது. சிரித்துக்கொண்டே தன் பர்ஸை எடுத்து ஓட்டுநர் உரிமம், நிறுவன அடையாள அட்டை ஆகியவற்றைக் காட்டினான்.

உரிமத்தைப் பார்வையிட்டவாறே, "துரைசாமி சாரை உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றார்.

"சின்ன வயசிலிருந்தே பழக்கம். நானும் அவரும் காலேஜ் ஃபுட்பால் டீம்ல ஒண்ணா விளையாடியிருக்கோம்."

"ஓ... இப்பவும் வெளயாடுவீங்களா?"

"ப்ச.... இல்ல சார். ஐ.டி. இண்டஸ்ட்ரி என்னைப் போல ஸ்போர்ட்ஸ் பர்சன்ஸையெல்லாம் காயடிச்சிடிச்சி."

அதிகாரி புன்னகை புரிந்தார். "உங்க பேர் என்ன?" என்றார்.

"சிவா."

"இதுல வேறமாரி போட்ருக்கு?"

"சிவஷங்கர்."

"இல்லியே..."

சிவா சிரித்தபடி, "சிவ ஷங்கர் பிரசாத்னு போட்டிருக்கும் சார்" என்றான்.

"போலீஸ்ல, கவர்ன்மென்ட் டிபார்ட்மென்ட்ல எல்லாம் பேர கேட்டா முழுசா அஃபிஷியல் பேர சொல்லுங்க. அதுதான் முறை" என்றார் அதிகாரி.

"சரி சார்."

"கௌம்புங்க. உங்க ஃப்ரெண்டை சீக்கிரமா கல்யாணம் பண்ணிக்க சொல்லுங்க."

"தேங்க்யூ சார்."

"அரவிந்தன்" <aravindanmail@gmail.com>

# நிர்வாணம் ஆயுதமாதல்

## ந. பெரியசாமி

ஸலாம் அலைக் (நாவல்) - ஷோபா சக்தி (ஆசிரியர்); விலை: 450; வெளியீடு: கருப்புப் பிரதிகள், பி55 பப்பு மஸ்தான் தர்கா, லாயிட்ஸ் சாலை, சென்னை - 600005; தொலைபேசி: +91 94442 72500; மின்னஞ்சல்: karuppupradhigal@gmail.com

இச்சன்னல் வழியே தெரிவது
வானத்தின் ஒரு பகுதிதான்
என்றான்.
முழுவானமும் தெரியும் வசமாய்
ஒரு ஜன்னல் செய்ய முடியுமா?

- பிரான்சிஸ் கிருபா

எந்த ஒரு போர் குறித்தும் முழுமையான பதிவு, உண்மையான இழப்புகள் குறித்த விவரம் வந்துவிடுவதில்லை. அதிகாரபூர்வமாக தெரிந்தவர்களும் சொல்வதில்லை. இலங்கையில் நிகழ்ந்த இன அழிப்பொழிப்பு குறித்தும் அப்படியான நிலையே. இலக்கிய பிரதிகள் மூலம் ஒரு சித்திரத்தை உருவாக்கி பார்த்துகொள்ளலாம்.

இலங்கையில் நடந்த மாபெரும் மனிதப் படுகொலை, இன அழிப்பு குறித்து சிறு சிறு பகுதிகள் மூலம் ஒட்டுமொத்த சித்திரத்தை உருவாக்கும் முயற்சியே ஷோபாசக்தியின் எழுத்துகள். இது அவரது ஐந்தாவது நாவல். மடியில் படுக்கவைத்து தலைகோதியவாறு கதை கூறும் பாங்கு அவரது மொழிக்கு உண்டு. 'இந்த உலகத்தில் ஒரே ஒரு கதைதான் உண்டு' எனும் சொல்லாடல் நாவலில் அவ்வப்போது வருவதற்கான காரணத்தை நாவல் தன்னுள் கொண்டுள்ளது.

தன் தேசத்திலிருந்து வெளியேறி, பிற நாடுகளில் அகதியாக அலைவுறுபவனின் வாழ்வில் அமைதி உருவானதா என்பதை தேட வைப்பதே 'ஸலாம் அலைக்' நாவலின் கதை.



*1950 டிசம்பர் 14இல் உருவாக்கப்பட்டு ஜெனிவாவில் அமைந்துள்ள அகதிகளுக்கான ஐக்கிய நாடுகளின் ஆணையம் என்னும் ஐக்கிய நாடுகள் அமைப்பானது அகதிகளைப் பாதுகாப்பதற்கும் ஆதரவளிப்பதற்கும் அரசின் அழைப்பினாலோ அல்லது ஐக்கிய நாடுகளின் அழைப்பினால் அகதிகளை மீளத் திரும்புவதற்கோ அல்லது மீள் குடியமர்விற்கோ உதவுதலை கருப்பொருளாக கொண்டதாகும்.*

இவ்வமைப்பு தரும் நம்பிக்கையே, தன் தேசத்திலிருந்து தப்பிப் போய் தஞ்சமடைந்து, எப்படியாகினும் இவ்வுலகில் வாழ்ந்திடலாம் என புலம்பெயர காரணமாக இருந்துவிடுகிறது. பிற நாடுகள் சிவப்பு கம்பளம் விரித்து வரவேற்று வாழ வைத்திடுகிறதா? அகதிக்கான அடையாள அட்டை பெறுதல் அவ்வளவு எளிதாக உள்ளதா? என்பதை நாவல் விவரிக்கிறது, ஜெபானந்தன் என்பவரின் கதை மூலம்.

கந்தஞானி, சாவித்திரி இணையரின் ஆதரவில் ஜெபானந்தனுக்கு கிடைக்கும் வேலையை கொண்டு, உமையாளின் துணையோடு, எப்படியும் இத்தேசத்தில் வாழ்ந்திடலாம் என நம்பி அகதிக்கான அடையாள அட்டை பெற தொடர்ந்து கோரிக்கைகள் அனுப்புகிறான். ஆனால், 'நீங்கள் சொல்லும் காரணங்கள் அரசுக்கு ஏற்புடையதல்ல; நீங்கள் இத்தேசத்தைவிட்டு வெளியேற வேண்டும்' எனும் பதிலையே பெறுகிறான். அதனால் ஏற்படும் வேதனைகளை மீண்டும் மீண்டும் முயற்சிப்பதன் மூலம், நம்பிக்கை எனும் துளிர்ப்பை கொண்டு கடக்கிறான். ஒளிந்தோடி வாழ வேண்டி இருப்பதன் துயரை சொல்லிவிட முடியாது. நாவலை வாசித்துதான் உணர முடியும்.



வயிறு முட்டத் தண்ணீர் குடித்தேன். மனம் சற்று ஆறிப்போனது. இந்த மனம் உண்மையிலேயே விசித்திரமானதுதான். சில சமயங்களில் ஒரு கோப்பை நீரிலேயே தணிந்து விடுகிறது. சாவு எதிரே நிற்கும் போதும் இந்த மனம் ஏதோவொரு நம்பிக்கையை பற்றிக்கொண்டு விடுகிறது. கடைசி நொடியிலும் ஒரு அற்புதத்தை எதிர்பார்க்கிறது.

*கோடான கோடி அகதிகளின் அகத்தில் உருக்கொள்ளும் இத்துளிர்ப்புதான் அவர்களை வாழச் செய்கிறது. ஓடியும் ஒளிந்தும் வாழ்ந்து கொண்டிருப்பதை உணர முடிகிறது. கொரோனா காலத்தில் நோய் முற்றி மருத்துவமனையில் தனித்து தினசரி செத்துக் கொண்டிருப்பவர்களை பார்க்கிறபொழுதெல்லாம் எனக்கு இந்நிலை வராது, எப்படியும் குணமாகி வெளியேறிவிடுவேன் எனும் நம்பிக்கை என்னுள் திரண்டிருந்த காலமும் நினைவில் இருக்கச் செய்தது.*

*உழைப்புச் சுரண்டல் என்பது உலகின் அரிச்சுவடி போலும். ஜெபானந்தன் தன் பார்க்கும் வேலை குறித்து விவரித்து செல்வதிலும் முடியப்பனின் கதை மூலமும் அதை அறிந்துகொள்ள முடிகிறது. கடின வேலை பளுவால் நேர்ந்த தவற்றிற்காக சித்ரவதைக்கு உள்ளான போது அதிலிருந்து தப்பிக்க முதலாளியின் முன் தன்னை நிர்வாணமாக்கி நின்ற முடியப்பனின் செயல் நம்மை திகைக்கச் செய்கிறது. எளியவர்களுக்கு நிர்வாணம் கூட ஆயுதமாக மாறத்தான் செய்கிறது.*

*'தந்தைக்கு முன்பாக மகனை அடிப்பது, தந்தையை கொன்றதற்கு சமானம்' என நினைத்து வாழ்ந்த ஜெபானந்தன், பிராயத்தில் தன் தந்தையின் முன்னே, தாயும் சகோதரியும் அமைதிப் படையினரால் சிதைந்து போய், அவர்களிடம் இருந்து தப்பி வந்த கதைப்பகுதியை வாசிக்கிறோம். அரசியல் பிரச்சினைகளை, தன் படைப்புகளில் வெறும் பிரச்சாரம் என எவரும் ஒதுக்கிட முடியாது மொழியின் நுட்பத்தோடும் அழகியலோடும் சொல்லிச் செல்வதில் தேர்ந்தவர் ஷோபா சக்தி. அவர் தன் படைப்புகளை அரசியல் துண்டு பிரசுரம் எனச் சொல்வது ஏற்புடையது அல்ல என்பதை நம்மால் இதை இந்தப் பகுதியை படிக்கும்போது உணர முடிகிறது. "அய்யா... வாங்க, வாங்க நாங்கள் இந்திரா காந்தி அம்மாவுக்குதானே ஆதரவு" எனும் சொற்களை வாங்க மறுத்த காதுடையவர்களாக அமைதிப்படையினர் இருந்ததனால் நமக்கும் உண்டான எரிச்சல், 'ராசீவ் காந்தி மகிமையை காட்டிவிட்டார்' என்பதை வாசிக்கையில் கடந்திட முடிகிறது.*

*விதைப்பதையே அறுவடை செய்ய இயலும். ஆயுதங்களை விளைவிக்க அகிம்சையை அறுவடை செய்ய இயலுமா?*

*அகிம்சையால் தன் குறிக்கோளை அடைய முடியும் என உலகுக்கு உணர்த்திய காந்தியடிகளை பிறப்பித்த தேசத்தைச் சேர்ந்தவர்களுக்கு, ஆயுதங்களால் சிதைந்த வரலாற்றை வடுவாக கொண்ட ஈழம் விட்டுச் சென்றுள்ள படிப்பினைகள் ஏராளம். ஈழத்தில் கந்தியடிகளின் அகிம்சையை ஆயுதமாக்கி போராடியிருந்தால் இத்தகைய இழப்புகள் இல்லாது இருந்திருக்குமோ? அகிம்சையை மதித்த பிரிட்டீசாரின் இயல்பு சிங்களத்தவர்களிடம் இருந்திருக்குமா? போராட்டக்காரர்கள் என்ன ஆயுதம் எடுக்கவேண்டும் என்பதை தீர்மானிப்பவர்கள் அதிகாரத்தில் இருப்பவர்கள்தானா? எதையும்*

அரிதியிட்டு கூறமுடியாது மனதுள் தத்தளிப்புகளை ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறது நாவல்.

போராட்டக்காரர்கள் ஆயுதங்களை நம்பியதில் இருக்கும் நியாயத்தைகூட உணரலாம்; ஆனால், அமைதியை உருவாக்கச் சென்ற இந்திய அமைதிப் படையினர்கள் கூட ஆயுதங்களைக் கொண்டுதானே அமைதியை ஏற்படுத்துவதாக சொன்னார்கள். அவர்கள் மக்களுக்கு இழைத்த நம்பிக்கை துரோகங்களை,வெப்பமடைந்த உடலோடுதான் வாசிக்க முடிகிறது. 'ராசீவ்காந்தியை நம்பியவர்கள், இந்திராவை நம்பியவர்கள் நாங்கள்' என தஞ்ச மடைந்தவர்களைக்கூட விட்டுவிடாது கொன்று குவித்த செயல்களை பார்க்க எந்த அறத்தை ஒப்பிடுவது?

ஷோபா சக்தியின் எழுத்துகள் சார்பற்றவை. பாதிக்கப்பட்ட மக்களின் குரல். சிங்கள ராணுவம், புலிகளின் இயக்கம், அமைதிப் படையினரின் தொந்தரவு என மும்முனைத் தாக்குதலுக்கு பயந்தும் பதுங்கியும் வாழ்ந்த மக்களின் பிரச்சினைகளை தொடர்ந்து வெளிப்படுத்துக் கொண்டிருப்பவர். தான் சார்ந்த இயக்கம், அமைப்பு, தனக்கு பிடித்த தலைவர்கள் குறித்து நாயகத்தன்மை அல்லது குலசாமியாக்கி கொண்டாடும் பொதுபுத்தியோடு இருப்பவர்களுக்கு உவப்பானதாக இருக்காது. எனவே அத்தகையவர்களால், அமைப்போடும் தலைமையோடும் கருத்து முரண்பாடு கொண்டு, அதன் விளைவுகளை தொடர்ந்து எழுத்தில் கொண்டுவந்தபடி இருக்கும் ஷோபாசக்தியின் செயல், விமர்சிக்கப்பட்டு வருவதை புரிந்துகொள்ள முடிகிறது. இந்நாவலிலும், 'வேலுப்பிள்ளையின்ர வளர்ப்புப் பிழைதான் காரணம்' எனும் கூற்று ஈழப் போராட்டம் குறித்து நம்முள் பல யோசிப்புகளை உருவாக்கிச் செல்கிறது.

நமக்கு விவரம் அறிய நடந்த போர்களால் மனிதகுலம் சருகளவேனும் கூடுதல் பலனை பெற்றிருக்குமா? அப்படியிருக்க போர்கள் முன்னெடுக்கப்படுவதன் அவசியம் எங்கிருந்து வந்தது? உற்பத்தி செய்த போர்க் கருவிகளை பயன்படுத்த வேண்டிய கட்டாயத்தால் போர்ச் சூழல் உருவாக்கப்படுகிறதா? நிலங்களையும் பொருளையும் இழந்து, துயர்களையும் வலியையும் பெற்று கிடப்பது சாமானியர்கள்தானே, அகதிகளாக பிறப்பெடுப்பதும் அவர்கள்தானே. எளியோரின் வாழ்வை சிதைக்கும் போரில் எத்தனாயிரம் குழந்தைகளை இழந்திருப்போம். போர்க் கருவிகள் ஏவுபவனைப் போன்று நேயமற்றவைகள்தானே. குழந்தைகளை கொல்லாமல் இருக்குமா? எதற்காக, யாரால் கொல்லப்படுகிறோம் என்பதைக் கூட அறியாது இறந்துபோவோர்களின் கண்களை எப்பதிலைக்கொண்டு மூடப்போகிறோம். தலைமுறைகள் கடந்தும் நோய்மை பீடிக்கச் செய்யும் போர்கள் எதற்காக? நாவல் நம்முள் நிறைய கேள்விகளை உருவாக்கியபடியே செல்கிறது நாவல்.

ஆன்மா,உடல்,பாஸ்போர்ட் என மூன்று மூலகங்களைக் கொண்டது அகதிகளின் உயிர் என்கிறார், ஷோபா சக்தி. உங்களது ஆன்மா இருண்டு போய் இருக்கலாம், உடல் சிதைந்து போய் இருக்கலாம், உங்களிடம் செல்லும்படியான பாஸ்போர்ட் ஒன்றிருந்தால் எதையும் கடந்து செல்ல முடியும் என்கிறார். அடிக்கடி அடையாளத்தை பதியவேண்டி இருப்பதற்காக தன் பத்து விரல்களையும் அயர்ன் பாக்சில் தீய்த்துக் கொண்டவரின் கதையை வாசிக்கையில் தன்னிச்சையாக விரல்களை தடவிப் பார்க்கச் செய்தது.

தொடர்ந்து துயரோடு வாழும் ஜெபானந்தனுக்கு கிடைத்த பாஸ்போர்ட் ஒன்றில் தலையை மாற்றி பிரான்சு செல்ல, அங்கும் உண்மையறிய மீண்டும் தன் துயர் வாழ்வை தொடருகிறார். ஜெபானந்தனைப் போன்று எண்ணற்றவர்கள் வாழ்ந்துகொண்டுதான் இருப்பார்கள். அது அவர்களுக்கு பழகிபோய் இருக்கக்கூடும். நமக்கு,இப்படியானவர்களும் உலகில் வாழ்ந்துகொண்டுதான் உள்ளார்கள் என்பதை அறியத் தருகிறார் ஷோபாசக்தி. என்றாவது அவர்களின் வாழ்வில் அமைதி உண்டாக நாமும் ஒருமுறை சொல்வோம் 'ஸலாம் அலைக்'.

நாவலை வாசித்து முடித்ததும், தமிழ்நாட்டில் அகதிகள் முகாமில் இருப்போருக்காக நாம் என்ன செய்துள்ளோம், நம்மை நம்பி வந்தவர்களை என்னவாக வைத்துள்ளோம் என்ற கேள்வி எழுகிறது. திறந்தவெளி சிறைக்கூடமாகத்தானே இருக்கிறது தமிழ்நாட்டில் உள்ள இலங்கை அகதி முகாம்கள். இனப்பற்று, மொழிப்பற்று என பேசிக் கொண்டிருப்பதிலிருக்கும் உண்மைதன்மை குறித்த குற்ற உணர்வையும் நாவல் ஏற்படுத்திச் செல்கிறது.

"ந. பெரியசாமி" <na.periyasamy@gmail.com>

# அன்றும். இன்றும். என்றும்...
# உங்களுடன் ஸ்ரீராம்...





1975 இல் திரு. தியாகராஜன் தனது ஒரே மகளின் கல்யாண செலவு திட்டத்திற்கு மேல் அதிகரித்தது. பாக்கித் தொகைக்கு எங்கே செல்வது? மனைவியின் நகையை அடமானமோ, நிதியுதவியோ, வீட்டின் மீது கடனோ இதற்கெல்லாம் வழியில்லை. அவர் எப்படி சமாளித்தார்? ஏற்கனவே சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை ஏலத்தில் எடுத்து வெளி ஆதரவையோ, உதவியையோ நாட வேண்டிய அவசியமின்றித் தனது தேவைக்கான நிதியைப் பெற்றார்.

இன்று திருமதி. லதா முசிறியில் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார். ஸ்ரீராம் நிறுவனத்தில் ரூ.1 இலட்சம் நிதியுதவி பெற்று வியாபாரத்தில் முதலீடு செய்து நல்ல வருமானம் பெற்று ஸ்ரீராம் குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கிறார்.

1974 ஆம் ஆண்டு துவங்கப்பட்டு ஸ்ரீராம் சீட்டு நிறுவனம் ரூ.250 முதல் சிறிய தொகையில் சீட்டுக்களை தொடங்கி ஏழை எளிய மக்கள் தங்களின் வீடு, கல்வி, திருமணம் மற்றும் மருத்துவச் செலவு என பலவித தேவைகளைப் பூர்த்தி செய்ய கடந்த 40 வருடங்களாக, 4 தலைமுறைகளாக பெரும் பங்களித்துள்ளது. இன்று 50,000 ரூபாய் முதல் 50 இலட்சம் வரையிலான சீட்டுத் திட்டங்கள் மூலம் 700 கிளைகள், 12000 பணியாளர்கள், 80,000 முகவர்கள், ரூ.60000 கோடிக்கு மேல் பணம் வழங்கப்பட்டு, 40 இலட்சம் வளமான வாடிக்கையாளர்கள் என வளர்ச்சியடைந்துள்ளது.

இன்று இந்தியாவில் 80% லாரிகள் தனி நபர் வசமே உள்ளது. ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் இந்தியாவில் இயங்கும் லாரிகளில் 25% அளவிற்கு நிதியுதவி அளித்து ஓட்டுநர்களாக இருந்தவர்களை லாரி உரிமையாளராக உருவாக்கியுள்ளது. இதன் மூலம் 15 இலட்சம் பேர் பயனடைந்துள்ளனர். ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் கடந்த 40 வருடங்களாக லாரி உரிமையாளர்களுக்கு கடன் வழங்கி வருகிறது. இன்று லாரிக் கடன் வணிகம் (AUM) ரூ.55000 கோடி உள்ளது.

கடந்த 30 ஆண்டுகளாக ஸ்ரீராம் சிட்டி யூனியன் பைனான்ஸ் லிமிடெட் – குறு, சிறு மற்றும் நடுத்தர என தொழில் முனை வோருக்கு சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.2 இலட்சம் வரை நிதி வழங்கிள்ளது. இந்த சேவை 995 கிளைகள், 15,506 பணியாளர்கள் மூலமாக 23 இலட்சம் வாடிக்கையாளர்களுக்கு நிதியுதவி வழங்கப்பட்டு 14,937 கோடி ரூபாய் வணிகம் (AUM) உள்ளது.

ஸ்ரீராம் ஹவுசிங் பைனான்ஸ் லிமிடெட் நிறுவனம் தொடங்கப்பட்டு வீடு வாங்க கடன் சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.10.23 இலட்சம் என வழங்கப்பட்டுள்ளது. இந்த சேவை 47 கிளைகள், 259 பணியாளர்கள் மூலமாக செயல்பட்டு வருகிறது. இதுவரை 3000 வாடிக்கையாளர்களுக்கு ரூ.322.64 கோடி நிதியுதவி வழங்கப்பட்டுள்ளது.

தென் ஆப்பிரிக்காவின் மிகப் பெரிய காப்பீட்டு நிறுவனமான **SANLAM** னுடன் இணைந்து இந்தியாவில் ஸ்ரீராம் லைஃப் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 10,34,630 காப்பீடுகள் பெறப்பட்டு இழப்பீட்டு தொகை ரூ.87.26 கோடிகளும் மற்றும் **SANLAM**-ன் கிளைப் பிரிவாகிய **SANTAM** னுடன் இணைந்து ஸ்ரீராம் ஜெனரல் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 14,07,677 காப்பீடுகள் பெறப்பட்டு இது வரை இழப்பீட்டு தொகை ரூ.452.62 கோடிகள் வழங்கப்பட்டுள்ளது.

தொழில் முனைவோர்களை அதிகம் கொண்ட நாடு இந்தியா. அத்தகைய தொழில் முனைவோரை ஊக்குவித்து, நிதியளித்து, வருவாய் பெருகவும், வாழ்க்கைத் தரம் மேம்படவும் உதவுகிறோம். கடந்த 40 வருடங்களாக விஜயதசமி மற்றும் சித்திரை என இருமுறை நடைபெறும் சீட்டுத் திருவிழாவில் பங்கு கொண்டு உங்கள் தேவைகளுக்கு ஏற்ப திட்டங்களை தேர்ந்தெடுத்து பயனடைந்துள்ளீர்கள். இந்த இணக்கமான உறவு அன்றும், இன்றும், என்றும் தொடர்ந்து கொண்டே இருக்கும். மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**ஸ்ரீராம் சிட்ஸ்**

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6 • போன்: 4223 6000 www.shriramchits.com

WORDCRAFT

# மதியம்

## டி. கண்ணன்

### மதியம் - 1

ஊரிலிருந்து விரட்டியடிக்கப்பட்டு
ஓடினான் ஒருவன்

விலகி ஓடினான் இன்னொருவன்

வேறொரு ஊரின் மதியத்தின் நதியில்
இருவரும் மூழ்கி எழுந்தார்கள்

நீர் விளையாட்டில்
நிழலென கவ்விய மீன்
நிஜமென உணர்ந்து
பறந்து மறைந்தது
கொக்கு

இருவரும் பரஸ்பரம் சந்தித்துக் கொண்டார்கள்

யார் முதலில் தப்பித்து ஓடுகிறார்கள்
என்று ஆவலுடன் காத்திருந்தான் நான்

மிதந்த முலைகளின் நிழல்கள்
கடந்து கொண்டிருந்தன
நதியில்



### மதியம் - 2

அடர் மழை ஓய்ந்த பின்
எழுந்த பொட்டை மதியத்தில்
அங்கிருந்துதான் நான் கிளம்பினேன்
பாட்டையில் சந்தித்த அவனும்
எங்கிருந்தோ கிளம்பியிருக்கிறான்

வெகு இயல்பாக 'எங்கு' போகிறிர்கள் என்று கேட்டான்
'அங்கு' என்றேன் நான்

நீங்கள் எங்கு போகிறீர்கள் என்று அவனிடம் கேட்டேன்
'எங்கோ' என்றான் அவன்

சற்று யோசித்து விட்டு பின்பு
நான் அங்கு வரட்டுமா என்றான்

கண்களால் ஏதோ சமிக்ஞை செய்தேன்
என்னுடன் கை கோர்த்துக் கொண்டான்

இறந்த காலம்
நிகழ் காலத்தைக் கடந்து
எதிர் காலத்தில் கலப்பதாய்
ஓர் சிலிர்ப்பு

"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>

# விட்டல்ராவின் கபாலி

## பாவண்ணன்

‘தினமணி கதிர்’ இதழில் அறுபதுகளிலும் எழுபதுகளிலும் தான் எழுதி வெளிவந்த சிறுகதைகளையெல்லாம் தனியாகப் பிரித்தெடுத்து இரு பெருந்தொகுதிகளாக பைண்டிங் செய்து வைத்திருந்தார் விட்டல்ராவ். ஒருமுறை அவரைச் சந்தித்துவிட்டுத் திரும்பும்போது, படித்துவிட்டுத் தருவதாகஒருதொகுதியை வீட்டுக்குஎடுத்துவந்தேன்.

அந்தக் காலத்து ‘தினமணி கதிர்’ இந்தக் காலத்து ‘காலச்சுவடு’ அளவில் இருந்தது. ‘தினமணி’ அலுவலகத்திலிருந்து வெளிவந்த போதும் அதற்குத் தனியாக விலை வைக்கப்பட்டிருந்தது. தொடக்க இதழ்களில் விலை முப்பந்தைந்து காசு என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதுகொஞ்சம்கொஞ்சமாக உயர்ந்து அறுபது காசு வரைக்கும் சென்றிருந்தது.

ஒவ்வொரு பக்கமாக முதலில் புரட்டிப் பார்த்தேன். ’பார் பார் பட்டணம் பார்’ என்றொரு பகுதி ஒவ்வொரு இதழிலும் இடம்பெற்றிருந்தது. அப்பகுதியில் சென்னையில் உள்ள பழைய ஆங்கிலேயர் காலத்து கட்டடங்களைப் பற்றிய சுருக்கமான தகவல்கள் இடம்பெற்றிருந்தன. அவற்றுடன் சில்பி கைவண்ணத்தில் உருவான அக்கட்டடங்களின்கோட்டோவியங்களும்இருந்தன. அரைநூற்றாண்டு கடந்த பிறகும் சில்பியின் ஓவியங்கள் வசீகரத்தோடு காணப்பட்டன.

முதலில் சிறுசிறு தகவல்களையெல்லாம் படித்து முடித்தேன்.பிறகுவிட்டல்ராவ்எழுதியசிறுகதைகளை ஒவ்வொன்றாகப் படிக்கத்தொடங்கினேன். ஒருமுறை ‘தினமணி கதிர்’ நடத்திய சிறுகதைப்போட்டியில் விட்டல்ராவ் எழுதிய ‘சொர்க்கத்துக்கு 21 துப்பாக்கி மரியாதை’ என்னும் சிறுகதைக்கு முதல் பரிசு கிடைத்திருந்தது. இன்னொருமுறை அவருடைய ’கபாலி’ என்னும் சிறுகதைக்கு இரண்டாம் பரிசு கிடைத்திருந்தது. சில கதைகள் நட்சத்திரக் கதை என்னும் சிறப்புக் குறிப்போடு வெளிவந்திருந்தன. பொதுப்பிரிவிலும் சில கதைகள் பிரசுரமாகியிருந்தன. நான் எல்லாவற்றையும் பொறுமையாகப் படித்து முடித்தேன்.



அக்கதைகளில் எனக்கு ‘கபாலி’ சிறுகதை மிகவும் பிடித்திருந்தது. மிகச்சிறந்த திரைப்படத்தின் திரைக்கதை வடிவத்தைப்போல இருந்தது அச்சிறுகதை.

கபாலி ஒரு பேட்டை ரவுடி. சட்டத்துக்குப் புறம்பான எல்லா வேலைகளையும் செய்துவந்தான். அவனுக்குத் துணையாக ஒரு சிறிய கூட்டமே வேலை செய்தது. அதே ஊரில் வீரய்யா என்பவன் இன்னொரு ரவுடி. அவனும் தனக்கென ஒரு கூட்டத்தைச் சேர்த்து வைத்துக்கொண்டு செயல்பட்டு வந்தான். மறைமுகமாக சாராயம் காய்ச்சி விற்றான். போதைப்பொருள் விற்றான். மேலும் பாலியல் தொழிலில் ஈடுபடும் பெண்கள் அணியும் அவனிடம் இருந்தது.

எங்கோ தொலைவில் தொழிலில்லாமல் இருந்த வீரய்யாவை தொடக்க காலத்தில் கபாலிதான் சென்னைக்கு அழைத்துவந்து வாழ்வதற்கு வழிகாட்டினான். ஆனால், சிறிது காலத்திலேயே கபாலியை விஞ்சும் அளவுக்கு வளர்ந்துவிட்டான் வீரய்யா.

ஒருமுறைரங்கம்மா என்கிற அழகான பெண்ணை நடிகையாக்கும் ஆசை காட்டி கிராமத்திலிருந்து அழைத்து வந்துவிட்டான் வீரய்யா. தக்க தருணம் பார்த்து பாலியல் தொழிலில் இறக்கவும் திட்டமிட்டிருந்தான் அவன். தற்செயலாக அச்செய்தியை அறிந்துகொண்ட கபாலி அவளை அங்கிருந்து ரகசியமாக அழைத்துவந்து தன் துணையாகச் சேர்த்துக்கொண்டான். செய்தியை அறிந்துகொண்ட வீரய்யா தன் அணியைச் சேர்ந்த பெண்ணை தன்னிடம் ஒப்படைத்துவிடுமாறு கேட்டு தகராறு செய்தான். கபாலி அதற்குச் செவிசாய்க்க மறுத்தான். அதுவரை அவர்களிருவருக்கும் இடையில் மௌனநிலையில் இருந்த பகை, அன்றுமுதல் வெளிப்படையான மோதலாக வளர்ந்தது. பேட்டையை விட்டே அவனை ஒழித்துவிடுவதாக மனசுக்குள் கறுவினான். சந்திக்கும் இடங்களில் எல்லாம் இருவரும் உப்பு சப்பில்லாத காரணத்துக்கெல்லாம் மோதிக்கொண்டனர்.



ஒருநாள் ஒரு தேநீர்க்கடை வாசலில் கபாலிக்கும் வீரய்யாவுக்கும் சண்டை வந்துவிடுகிறது. (எழுத்து வடிவமான கதை, இந்தப் புள்ளியிலிருந்துதான் தொடங்குகிறது.) வாய்ச்சண்டை வலுத்து கைச்சண்டையாக மாறிவிடுகிறது. பிறகு திசைக்கொருவராக ஓடிவிடுகின்றனர்.

அதே தேநீர்க்கடையில் தேநீர் அருந்தவந்த புதிய கான்ஸ்டபிளான துரை, ஆவேசமில்லாமல் அனைத்தையும் அமைதியாகப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறான். ஒவ்வொரு ரவுடியும் எப்படிப்பட்டவர் என்பதை தேநீர்க் கடைக்காரர் வழியாகவே தெரிந்துகொள்கிறான். இருவரில் கபாலி சற்றே மேலானவன் என அவன் மனம் முடிவெடுக்கிறது.

ஒருநாள் இரவு சாராயக்கடையில் அந்தக் கான்ஸ்டபிள் துரையும் கபாலியும் நெருக்கமாக உரையாடி நண்பர்களாகிறார்கள். வீரய்யாவின் சட்டவிரோத செயல்களை ஒவ்வொன்றாகக் களைவதற்குத் தேவையான உதவியை கான்ஸ்டபிளுக்குச் செய்கிறான் கபாலி. வீரய்யாவின் ரகசிய இடங்களை அவனுடைய ஆட்கள் காட்டிக் கொடுக்கிறார்கள். கான்ஸ்டபிளின் வேலை எளிதாகிறது. அவை அழிக்கபப்டுகின்றன. அவனுடைய ஆட்கள் சிறையில் அடைக்கப்படுகிறார்கள். ஸ்டேஷனில் அவன் நல்ல கௌரவத்துக்குரியவனாக வலம் வருகிறான்.

திருவிழா சமயங்களில் சட்ட ஒழுங்கு பிரச்சினை ஏற்பட்டுவிடாமல் தடுக்க காவலர்களுடன் கபாலி அணியினரும் கான்ஸ்டபிளுக்கு ஒத்தாசை புரிகின்றனர். இதனால் கான்ஸ்டபிளின் மதிப்பு ஸ்டேஷனில் அதிகரிக்கிறது. மேலதிகாரிகள் அவனைப் பாராட்டுகிறார்கள்.

அதே ஸ்டேஷனில் இன்னொரு கான்ஸ்டபிளாக வேலை செய்பவன் சாயிராம். கான்ஸ்டபிள் துரைக்குக் கிடைக்கும் பாராட்டுகளைப் பார்த்து பொறாமையில் வயிற்றெரிச்சல் கொள்கிறான் அவன். தக்க சமயத்தில் துரையை வீழ்த்தத் திட்டமிடுகிறான். அவன் வீரய்யாவுடன் கூட்டணி வைத்துக்கொள்கிறான். ஒருமுறை கபாலி அணியைச் சேர்ந்த ஒருவனை அழைத்துவந்து அடித்து காவலில் அடைத்துவிடுகிறான். விஷயமறிந்த துரை அதிகாரியிடம் தனக்கு இருக்கும் செல்வாக்கைப் பயன்படுத்தி அவனை காவலிலிருந்து விடுவித்து அழைத்துவந்து அனுப்பிவைக்கிறான்.

தனிப்பட்ட விதத்தில் தான் தோல்வியடைந்துவிட்டதாகநினைக்கிறான்சாயிராம். அன்றுமுதல் துரையைப் பழிவாங்க நினைக்கிறான். சாயிராமும் வீரய்யாவும் கூடி என்னென்னமோ திட்டமிடுகிறார்கள்.

ஒருநாள் கபாலியின் மனைவி கான்ஸ்டபிளைத் தேடி வருகிறாள். சில தினங்களாக கபாலி வீட்டுக்கு வரவில்லை என்று கவலையோடு தெரிவிக்கிறாள். உடனே தேடல் முயற்சியில் இறங்குகிறான் துரை. எந்த இடத்திலும் அவனைப் பார்க்கமுடியவில்லை. கபாலியின் ஆட்களும் கடைத்தெருவில் இருப்பவர்களும் கூட அவனை சமீபநாட்களாகப் பார்க்கவில்லை என்றே செய்தி சொல்கிறார்கள். கான்ஸ்டபிளுக்கு அச்செய்தி திகைப்பையும் கவலையையும் தருகிறது.

ஒருநாள் துரையும் சாயிராமும் சாலையில் நடந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். சந்தடி மிக்க நகரச் சந்திப்பை ஒட்டிய பகுதியில் கழிவுநீர் வழி அடைபட்டிருப்பதாக புகார் வந்ததையொட்டி மராமத்து வேலை நடந்துகொண்டிருக்கிறது. ஊழியர்கள் கழிவுத்தொட்டியில் இறங்கி அடைப்பை நீக்க முயற்சி செய்கிறார்கள், மூழ்கி எழுந்த ஊழியர்கள் ஏதோ ஒரு மனித உடல் நீர்வழியை அடைத்திருப்பதாகச் சொல்கிறார்கள். கடுமையான முயற்சிகளுக்குப் பிறகு அந்த உடலை வெளியே எடுத்து தரையில் கிடத்துகிறார்கள். முகம் சிதைந்திருக்கிறது. உடலும் உப்பி அடையாளம் தெரியாததாக மாறியிருக்கிறது.

தெருவில் இருப்பவர்கள் அனைவரும்

முண்டியடித்து வந்து அந்த உடலைப் பார்க்கிறார்கள். கூட்டத்தோடு கூட்டமாக வீரய்யாவும் வந்து பார்க்கிறான். உப்பிய கையில் காணப்பட்ட பச்சை குத்திய அடையாளத்தைப் பார்த்ததும் செத்துக் கிடப்பது கபாலியே என நினைத்து உள்ளூர மகிழ்ச்சியடைகிறான். ஆனாலும் "யாரோ எவரோ தெரியலை, பாவம்" என்று சொன்னபடி கூட்டத்திலிருந்து வெளியேறுகிறான்.

கான்ஸ்டபிள் சாயிராமும் இறந்து கிடந்த உடலையும் அந்த அடையாளத்தையும் பார்த்துவிட்டு அது கபாலியே என்பதில் நிறைவடைகிறான். இனிமேல் ஸ்டேஷனில் துரையின் செல்வாக்கு சரிந்துவிடும் என்று கணக்கிடுகிறான். பிறகு "யாரோ, தெரியலை, பாவம். வாய்யா போவலாம்" என்று சொல்லிக்கொண்டே நடக்கிறான்.

தரையில் கிடப்பது கபாலியின் உடல் என்பதை ஒரு திகைப்புடன் துரையும் உணர்கிறான். ஆனால், அவனாலும் தனக்குத் தெரிந்த உண்மையை வெளிப்படையாகச் சொல்ல இயலவில்லை. "ஆமாம், பாவம். யாரோ தெரியலை" என்று சொல்லிவிட்டு நடக்கத் தொடங்குகிறான்.

பொறாமை என்பது ஒரு நெருப்புப்பொறி போன்றது. அது வைக்கோல் போரையும் எரிக்கும், கூரையையும் எரிக்கும். எளிய மனிதர்களுக்கும் அது வெறியூட்டும். பெரிய மனிதர்களுக்கும் அது வெறியூட்டும். அதற்கு எழை பணக்காரன் என்னும் வேறுபாடோ, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்னும் வேறுபாடோ எதுவும் இல்லை. அடுத்தவர்களைச் சுட்டுப் பொசுக்காமல் அது அடங்காது.

இந்தக் கதையில் இருவேறு அடுக்குகள் வெவ்வேறு கோணத்திலிருந்து எழுந்துவந்து ஒரு புள்ளியில் சந்தித்துக்கொள்கின்றன. இருவேறு ரவுடிக்கும்பலுக்கு நடுவில் உள்ள முரண்களும் மோதல்களும் ஒரு அடுக்கு. இருவேறு கான்ஸ்டபிள்களுக்கு நடுவில் உள்ள பொறாமையும் போட்டியும் இன்னொரு அடுக்கு. கபாலியின் மரணம் தற்காலிகமாக எல்லா மோதல்களுக்கும் ஒரு முடிவாக அமைந்துவிடுகிறது. ஆனால், கபாலியின் மரணம் எப்படி நிகழ்ந்தது என்பது புரியாத புதிராகவே இருக்கிறது. இவ்விரண்டு அடுக்குகளிலும் கபாலியைப் பிடிக்காதவர்கள் தீட்டிய திட்டத்தின் விளைவாக இந்த மரணம் ஏற்பட்டிருக்கும் என்பதை உறுதியாகச் சொல்ல இயலவில்லை. மூன்றாவது இன்னொரு அடுக்கு செயல்பட்டு இந்த மரணத்துக்குக் காரணமாக அமைந்திருக்கலாம். ஆனால், அதையும் தீர்மானமாகச் சொல்ல இயலவில்லை. உண்மையின் மீது புகை படிந்திருக்கிறது. அந்தக் கலங்கலும் தெளிவின்மையும் கதைக்கு ஒரு தனித்த அழகாக அமைந்துவிடுகிறது.

தொடக்கக்காட்சியில் ஆரவாரமாகப் பேசுபவனாகவும் சோடா பாட்டில் வீசி மோதலுக்குத் தயாராக நிற்பவனாகவும் காட்சியளிக்கிறான் கபாலி. அவனை எதிர்க்க ஆளே இல்லை என்பதுபோல அவனுடைய ஆரவாரம் அமைந்திருக்கிறது. இறுதிக்காட்சியில் யாரோ கொன்று சாக்கடைக்குள் வீசிவிட்டுச் செல்ல, உருத்தெரியாத உடலாகக் கிடக்கிறான் அவன். அனைவரும் பார்த்து அச்சம் கொள்ளும் அளவுக்கு ஓங்கியிருந்த ஒரு வாழ்க்கை, சாக்கடையில் உருத்தெரியாத உடலாக செத்து மிதக்கும் அளவுக்கு மாறிவிடுகிறது.

ஒவ்வொருவனும் தன் மனத்துக்குள் தன்னை வல்லவன் என்று நினைத்துக்கொள்கிறான். ஆனால், அவனை வீழ்த்திவிடும் இன்னொரு வல்லவன் இன்னொரு திசையிலிருந்து முளைத்து வருகிறான். இந்த ஆக்கமும் அழிவும் இந்த உலகை இயக்கும் மாயவிசை. ஆற்றங்கரையின் மரமும் அரசறிய வீற்றிருந்த வாழும் விழுமன்றே என்பது ஔவையின் நல்வழிப் பாடல். அனைத்தும் விழும் என்பதும் விழுந்தவை அனைத்தும் முளைக்கும் என்பதும் ஒரு தொடர் செயல்பாடு. அந்த ஆடலிலிருந்து யாரும் எதுவும் தப்பிக்கவே முடியாது. மானுடன் தப்பிக்க முடியாத ஒரு புள்ளியை மின்னலைப்போல தொட்டு மீள்கிறது விட்டல்ராவின் சிறுகதை.

அன்றைய நாள் முழுதும் அந்தச் சிறுகதை மனத்திலேயே வட்டமிட்டுச் சுழன்று சுழன்று வந்தது. அடுத்தநாள் காலையில் விட்டல்ராவுடன் உரையாடும்போது நான் படித்த சிறுகதையைப் பற்றிச் சொன்னேன். அப்படி ஒரு கதைப் புள்ளியை அவர் எப்படிக் கண்டடைந்தார் என்பதை அறிய எனக்கு ஆவலாக இருந்தது. அதையே ஒரு கேள்வியாக அவரிடம் கேட்டேன். "அந்தக் கதைக்குப் பின்னால பல கதைகள் இருக்கு பாவண்ணன்" என்று சிரித்தார் அவர். "ஒவ்வொன்னா சொல்லுங்க சார்" என்று நான் தூண்டினேன்.

"நெஜமாவே அப்படி ஒரு ரவுடி இருந்தான்" என்று ஆரம்பித்தார். "அவனைப் பத்தி கதைகதையா சொல்வாங்க. அப்பப்ப அதெல்லாம் காதுல விழும். அதையெல்லாம் மனசுல வச்சிக்குவேன். ஒருநாள் திடீர்னு செத்துட்டான். அதைக் கேட்டு மனசுக்கு சங்கடமாய்டுச்சி. அதுவும் அவன் செத்துக் கிடந்த விதம் ரொம்ப ரொம்ப மோசமானது. அதுக்கப்புறமாத்தான் இப்படி ஒரு கதையை எழுதணும்னு ஒரு எண்ணம் வந்தது."

"தெரிஞ்ச ஆளா?"

"இல்லை இல்லை. மத்தவங்க சொல்றத கேட்டுக் கேட்டு நானே அவனுக்கு ஒரு உருவத்தை கொடுத்தேன்."

“சரி.”

“பெரிய ரவுடி அவன். அங்கங்க நின்னு ஆளுங்கள மெரட்டி பணம் புடுங்குவானாம். ஆறடி உயரத்துல ஆள் பாக்கிறதுக்கு ஒரு பெரிய தூண் மாதிரி இருப்பானாம். ஒரு நாள் அவனுடைய ஆட்டம் கொஞ்சம் எல்லை மீறி போயிடுச்சி.”

“என்ன நடந்திச்சி?”

“நண்டு கொழுத்தா வளையில தங்காதுன்னு சொல்வாங்க இல்லயா? அந்த மாதிரி ஆயிடுச்சி அவன் கதை.”

“ஏதாவது ஏடாகூடமான விவகாரத்துல எறங்கிட்டானா?”

“ஆமாம். ஆழம் தெரியாம காலை விட்டுட்டான். அந்தக் காலத்துல புகழ்பெற்ற நடிகை ஒருத்தவங்க உண்டு. பெரிய பெரிய ஹீரோ கூட எல்லாம் நடிச்சவங்க. எல்லா மட்டங்கள்லயும் அந்த நடிகைக்கு செல்வாக்கு இருந்தது. அதெல்லாம் தெரியாம, என்னமோ சாதாரணமான பொண்ணுகிட்ட நடந்துக்கிற மாதிரி நடந்துகிட்டான் அவன். அதுவே அவனுடைய முடிவுக்கும் காரணமாயிடுச்சி.”

“விவகாரம் என்னன்னு சொல்லுங்க சார்?”

“ஒருநாள் அந்த நடிகை படப்பிடிப்பு முடிஞ்ச கையோடு வீட்டுக்குத் திரும்பிட்டிருந்தாங்களாம். மேக்கப் கூட கலைக்கலையாம். ஏதோ அவசரம்னு கார்ல வந்திட்டிருந்தாங்க. கடைத்தெரு பக்கமா ஏதோ ஒரு பெரிய கடையைப் பார்த்திருக்காங்க. அந்த நடிகைக்கு அந்தக் கடையில ஏதோ ஒரு பொருள் வாங்கணும்ன்னு தோணியிருக்குது. உடனே வண்டிய நிறுத்தச் சொல்லிட்டு அவுங்க மட்டும் எறங்கி கடைக்கு நடந்து போனாங்க.”

“சரி.”

“அதே நேரத்துல அந்த ரவுடியும் அந்தப் பக்கமா வந்துட்டான். நடிகையைப் பார்த்ததும் அவனுக்கு என்னமோ தலைகால் புரியாத கிளுகிளுப்பு. பக்கத்துல போய் தொட்டுப் பார்க்கணும்னு ஒரு வேகம். சட்டுனு ஓடி போய் எல்லாருக்கு முன்னாலயும் அந்த நடிகையை வெறியோடு கட்டி புடிச்சிகிட்டான். அந்த நடிகை அதை எதிர்பார்க்கவே இல்லை. ரொம்ப பயந்துட்டாங்க. உடனே அவன புடிச்சி தள்ளினாங்களாம். ஆனா அவன் இரும்பு மாதிரி அந்த நடிகையை புடிச்ச புடிய விடவே இல்லையாம். அந்த நேரத்துல யாரும் எதிர்பார்க்காத வகையில அந்த நடிகையுடைய ப்ரெஸ்ட புடிச்சி நல்லா அழுத்தி கடிச்சிட்டானாம். அந்த நடிகை பயத்துல ஓன்னு சத்தம் போட்டபடியே அவன எப்படியோ புடிச்சி தள்ளிட்டாங்களாம். சுத்தி நின்னு பார்த்துட்டிருந்தவங்களால நம்பவே முடியலை. ஒரே அதிர்ச்சி. எல்லாருமே ஒரு கணம் திகைச்சி நின்னுட்டாங்களாம். அதுக்கப்புறம் அவனை புடிக்க ஓடினாங்களாம். ஆனா அதுக்குள்ள அவன் தப்பிச்சி ஓடிட்டான்.”

விட்டல்ராவ் சொல்வதையெல்லாம் கேட்கக்கேட்க எனக்குத் திகைப்பாக இருந்தது. இப்படியெல்லாம் நடக்கும் என்பதையே என்னால் நம்ப முடியவில்லை.

“அப்புறம் என்ன செஞ்சாங்க?”

“அப்புறம் செய்யறதுக்கு என்ன இருக்குது? நேரா போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் புகார் கொடுத்தாங்க அந்த நடிகை. கடுமையான நடவடிக்கை எடுக்கணும்ன்னு சொல்லிட்டு புறப்பட்டு போயிட்டாங்க. அவுங்கள பொறுத்தவரைக்கும் அந்த நாள் பெரிய அவமானத்துக்குரிய நாள்.”

“இயற்கைதானே, அப்படித்தானே இருக்கும்?”

“அவுங்களுக்கு எல்லா நிலைகள்லயும் செல்வாக்கு இருந்தது. போலீஸ் துறையில பெரிய பெரிய ஆபீஸர்ங்களயெல்லாம் ஃபோன்ல கூப்ட்டு விஷயத்தை சொன்னாங்க. காவல்துறையில இருந்தவங்களும் அந்த ரவுடி மேல ஏற்கனவே ரொம்ப கடுப்புல இருந்திருக்காங்க. அவன புடிக்கறதுக்கு ரகசியமா ஒரு குழுவை அனுப்பினாங்க.”

“சரி.”

“இன்னொரு பக்கத்துல தனக்குத் தெரிஞ்ச வேற ஒரு டீம் ரவுடிங்களை வச்சி ஆள கவுக்கறதுக்கும் ஒரு மாற்றுத்திட்டம் வச்சியிருந்தாங்க அந்த நடிகை.”

“அப்புறம்?”

“ரவுடி நடமாட்டம் திடீர்னு குறைஞ்சிபோச்சி. போலீஸ்க்கு பயந்து எங்கயோ மறைஞ்சிருக்கான்னு எல்லாரும் நெனைச்சிட்டாங்க. ஒரு வாரமாச்சி, பத்து நாளாச்சி. அப்பவும் ஆள பார்க்கவே முடியலை. பயத்துல எங்கயோ ஊர் மாறி போயிட்டான்னு ஒரு எண்ணம் வந்துட்டுது.”

“ஏன் அப்படி சொல்றீங்க?”

“திடீர்னு ஒருநாள் அவுட்டர்ல சாக்கடை அடைப்பை எடுக்கப் போன ஒர்க்கர்ஸ் ஆழத்துல ஒரு உடல் மாட்டியிருக்குதுன்னு சொன்னாங்க. எடுத்து போட்டு கழுவிட்டு பார்த்தா, அது அந்த ரவுடியுடைய உடல்.”

“ஐயோ, யாரு கொன்னாங்க? போலீஸ் டீமா? ரவுடிங்க டீமா?”

“அது கடைசி வரைக்கும் தெரியவே இல்லை. கொஞ்ச நாள் வரைக்கும் அந்தக் கதையை பத்தி

எல்லாரும் மாறி மாறி பேசிட்டே இருந்தாங்க. அதுக்கப்புறம் யாரும் பேசலை. அவ்ளோதான் மறந்துட்டாங்க. ஒரு நண்பர் எனக்கு அந்த ரவுடியுடைய கதையைச் சொன்னாரு. அதைக் கேட்டபோது ரொம்ப அதிர்ச்சியா இருந்தது. ஒரு வன்முறை இன்னொரு வன்முறை வழியா பழி தீர்த்துகிச்சி. ரெண்டுமே தப்பு. ஒரு தப்பு வெறியில செஞ்சது. இன்னொரு தப்பு திட்டம்போட்டு செஞ்சது. எந்த வித்தியாசமும் இல்லை. எல்லாம் ஒன்னுதான்."

"எல்லாம் சரிதான் சார். ஆனா நீங்க அந்த நடிகை கதையை உங்க கதைக்குள்ள வைக்கவே இல்லையே."

"உண்மைதான். என்னுடைய கதைக்கு அந்தப் பகுதி தேவையில்லைன்னு தோணிச்சி. அதனால் விட்டுட்டேன்."

"பேருக்குத்தான் அவன் ரவுடி. ஆனா கடைசியில பலியாடு மாதிரி செத்துடறான், பாவம். உங்களுடைய நல்ல கதைகள்ல ஒன்னு இது."

"அது சரி" என்றபடி சிரித்தார் விட்டல்ராவ். அத்துடன் உரையாடலை முடித்துக்கொள்வார் என்று நினைத்தேன். ஆனால், மறுகணமே ஒரு பெருமூச்சுக்குப் பிறகு, "அந்தக் கதையால என் வாழ்க்கையில ஒரு நல்ல விஷயம் நடந்தது. அது இந்தக் கதையைவிட சுவாரசியமான ஒன்னு" என்று உரையாடலைத் தொடங்கினார் விட்டல்ராவ்.

அதைக் கேட்டதும் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. "அது என்ன சார்? அதை முதல்ல சொல்லுங்க" என்றேன்.

"அது எனக்குக் கல்யாணம் ஆன நேரம் பாவண்ணன். கல்யாணத்துக்கு முன்னாலயே நான் ஆதம்பாக்கத்துல ஒரு வீட்டுமனை வாங்கி, ஆபீஸ்ல லோன் போட்டு ஒரு வீடும் கட்டிட்டேன். ஆனா அது முழுமையடையலை. வேற வழியில்லாம கல்யாணம் ஆனதும் நாங்க ரெண்டு பேரும் நேரா அந்தப் புது வீட்டுக்குத்தான் போனோம்."

"எந்த அளவுக்கு வீட்டு வேலை முடிஞ்சிருந்தது? எந்த அளவுக்கு முடியாம இருந்தது?"

"அதாவது, வெளியே இருந்து பார்க்கறதுக்கு வீட்டுவேலை எல்லாம் முடிஞ்சமாதிரி தெரியும். ஆனா பாதிக்கு உள் வேலை எதுவும் முடியலை. பணம் இல்லாம எல்லா வேலையும் பாதிபாதியா அப்படியே நின்னுட்டுது. கரென்ட் கனெக்ஷன் கூட கிடையாது."

"ஏன் அப்படி?"

"ஆபீஸ்ல குடுத்த கடன் தொகை முடிஞ்சிட்டுது. வெளியேயும் யாருகிட்டயும் கடன் வாங்கற சூழல் கிடையாது. அடமானம் வச்சி பணத்த பொரட்டி வேலையை முடிக்கிற அளவுக்கு சொத்து கித்து எதுவும் கிடையாது. எப்படி பணத்த பொரட்டி எப்படி வேலையை முடிக்கறது? சரி, கையில பணம் வரும்போது ஒவ்வொன்னா செஞ்சிக்கலாம்னு அப்படியே விட்டுட்டேன்."

"அப்படித்தான் இருந்தாவணும். நடுத்தட்டு வர்க்கத்துக்கு வேற வழி இல்லையே."

"சுவரும் கதவும் ஜன்னலும் மட்டும்தான் முழுசா இருந்தது. மத்தது எல்லாமே அறைகுறைதான். லெட்ரின், பாத்ரூம் எல்லாத்துலயும் நாலு பக்கமும் சுவர் மட்டும் இருக்குது. செய்யவேண்டிய மத்த வேலைகள் எதையும் செய்யலை. லெட்ரினுக்கு பிட் எடுக்கணும். பைப் கனெக்ஷன் குடுக்கணும். பேசின் உக்கார வைக்கணும். அறுநூறு எழுநூறு ரூபாய் வேணும். ஆனா ரொக்கமா எதுவும் எங்கிட்ட இல்லை. வெளியில பொரட்டறதுக்கும் வழியில்ல. இந்த மாதிரியான சூழல்லதான் புதுக்குடித்தனம் ஆரம்பிச்சிட்டோம்."

"அப்புறம் எப்படி சமாளிச்சீங்க?"

"தகரத்துல ஒரு பொட்டி மாதிரி செஞ்சி லெட்ரின் சீட் மாதிரி அதுல டிசைன் செய்யற மாதிரி ஒரு வெல்டர்கிட்ட ஒரு ப்ளான படம் போட்டு குடுத்தேன். அவரு அத உடனே புரிஞ்சிகிட்டாரு. எதுக்காகன்னு கேட்டாரு. விஷயத்தை சொன்னேன். நான் சொன்னத கேட்டதும், அவருக்கு என் மேல ஒரு அக்கறை வந்துட்டுது. ஒரே நாள்ல செஞ்சி குடுத்தாரு. கூலியும் அதிகமா கேக்கலை. வெறும் இருபது ரூபாதான் வாங்கினாரு."

"எப்படியோ, தற்காலிகமா ஒரு ஏற்பாடு செஞ்சிகிட்டீங்க."

"ஆமாம். அதை எடுத்தும் போய் லெட்ரின் ரூமுக்குள்ள வச்சி, அதையே ரெண்டு பேரும் லெட்ரினா பயன்படுத்தினோம்."

"சரி."

"பகல் முழுக்க பயன்படுத்தறதால அந்தப் பெட்டி ரொம்பிடும். ராத்திரி ஒரு ஒம்பது மணிக்கு மேல ஆதம்பாக்கமே அப்ப அடங்கிடும். அந்த நேரத்துல நான் அந்தத் தகரப் பொட்டிய தூக்கிகிட்டு வெளியே வருவேன். என் மனைவி டார்ச் லைட்ட அடிச்சி எனக்கு வெளிச்சம் காட்டிகிட்டே முன்னால நடப்பாங்க. அவுங்க கையில துடைப்பம், பெனாயில் பாட்டில் எல்லாம் இருக்கும். எங்க வீட்டுலேர்ந்து ரொம்ப தூரத்துல ஒரு ஏரி இருந்தது. அங்க போய் அந்தப் பொட்டிய காலி பண்ணிட்டு, அந்த ஏரியிலயே அத நல்லா கழுவி பெனாயில் ஊத்தி சுத்தப்படுத்திட்டு எடுத்து வருவோம்."

"எவ்ளோ காலத்துக்கு அந்த ஏற்பாடு இருந்தது?"

"சில மாதங்கள் அப்படியே ஓட்டனோம். அப்பதான் தினமணி கதிர்ல சிறுகதைப்போட்டி அறிவிச்சாங்க. கபாலி சிறுகதைக்கு ரெண்டாவது பரிசு கெடைச்சது. சாவி, சௌந்திரா கைலாசம்,

சுஜாதா மூனு பேரும் அந்தப் போட்டிக்கு நடுவர்கள். எழுநூத்தி அம்பது ரூபாய் பரிசு. கிட்டத்தட்ட என்னுடைய மூனு மாச சம்பளம் அது."

"அந்தப் பரிசுத் தொகையை என்ன பண்ணீங்க?"

"அதைச் சொல்லத்தான் லெட்ரின் கதையைச் சொன்னேன். கையில காசு வந்ததும் புதுசா பேசின், பிட்டிங்க்ஸ் எல்லாத்தயும் வாங்கினேன். குழி வெட்டற ஆளுங்களும் வந்து எல்லாத்தயும் ரெடி பண்ணி குடுத்துட்டு போனாங்க. அதுக்கப்புறம்தான் முழுமையான கழிப்பறை வசதி எங்க வீட்டுல சாத்தியமாச்சி. கபாலி கதைக்குப் பின்னால இப்படி ஒரு கதை இருக்குது."

விட்டல்ராவ் அதைச் சொல்லும்போது சாதாரணமாக புன்னகை படிந்த குரலிலேயே சொன்னார். துயரங்களைப் புன்னகையால் வெல்லும் கலை அவருக்கு இயல்பாகவே கைவந்த கலையாக இருப்பதை ஏற்கனவே பல தகவல்கள் வழியாக அறிந்தவன் என்கிற நிலையில் நானும் அக்கணத்தை வேகமாகக் கடந்துவர முயன்றேன்.

"ஒரு கதை, அந்தக் கதைக்குள்ள ஒரு கதை. அதுக்குப் பின்னணியா ஒரு கதை எல்லாமே அருமை சார்" என்றேன்.

"கபாலி கதையை சொல்லி என்னை என்னுடைய இளமைக் காலத்துக்கே நீங்க கொண்டுபோய்ட்டீங்க. பல பழைய விஷயங்களை அசைபோட வச்சிட்டீங்க. இன்னும் பல ஞாபகங்கள் முட்டி மோதுது" என்று சிரித்தார் விட்டல்ராவ்.

பாவண்ணன்
<writerpaavannan2015@gmail.com>

# 3

**கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..**

# ஔவையார்

## க்ருஷாங்கினி

சங்க காலப் பெண்பாற் புலவர்களிலேயே அதிகப் பாடல் எழுதியவர், பல தளங்களைத் தொட்டவர், அவ்வையார் தான். அவ்வையார் ஒருவரா பலரா? யார் யார் என்பது போன்ற சர்ச்சைகள் இன்னமும் நடைபெற்றுக் கொண்டுதான் உள்ளன. காலம், பாடல்களின் பொருள் நிலை என்று பல விதமாகத் தொடர்ந்து சர்ச்சைக்கு உட்பட்டு வருபவர் அவ்வை.

ஆத்திச்சூடி படிக்காத தமிழ் பிள்ளைகளே இருக்கமாட்டார்கள். அங்கேயே அறிமுகம் ஆகிறார், அவ்வையார்.

அவ்வையார் என்ற பெயர் பெரும் புகழ்பெற்றுக் கிடக்கிறது. கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சங்க காலத்தில் வாழ்ந்த அவ்வையாரையும் கி.பி. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த பந்தணன் தாதி என்ற நூல் எழுதிய அவ்வையாரையும் தமிழ் இலக்கியத்தில் காண்கிறோம். இடைப்பட்ட காலத்திலும் பல அவ்வைகள் வாழ்ந்திருக்கலாம். ஆனாலும், அவ்வை ஒருவரா பலரா என்பதை வாழ்க்கை வரலாறு மூலம் காண முடியவில்லை. அவ்வை மரபு என்று ஒன்று மட்டும் உறுதியாய் கூற இயலுகிறது.

1872இல் இலண்டனில் முதற் பதிப்பாக வந்த 'தமிழ் விஸ்டம்' என்ற தொகுப்பு நூலில் அவ்வையாரின் பல பாடல்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு வந்துள்ளது. ஆனால், அதில் அவ்வை ஒருவரா இருவரா பலரா என்பது குறித்து ஆராய முற்படவில்லை. ஒருவரே என்று ஏற்றுக்கொண்டு இருப்பார்கள். இந்த தொகுப்பைவிட, 1902இல், சித்தூர் சுப்ரமணிய பிள்ளை எழுதிய 'அவ்வையார்' என்னும் நூலில் அவ்வையாரின் புலமை மிகத்தெளிவாகத் தெரிகிறது. 11 தலைப்புகளின் கீழ் எழுதப்பட்ட கருப் பொருளைக் கொண்டு உணர்ந்துகொள்ள இயல்கிறது. திருவள்ளுவர் காலத்து அவ்வையாரும் கம்பர் காலத்து அவ்வையாரும் வேறு வேறு என்று விளக்குகிறார், சித்தூர் சுப்ரமணிய பிள்ளை. அச்சில் வராத அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை முதலியவற்றில் உள்ள பாடல்களையும் ஆராய்ந்து விளக்கி உள்ளார்.



இவ்வாறு ஆய்வுத்துறையில் காணப்பட்ட விவரங்களைக் கொண்டு க. அருணாச்சலம் ஒரு பட்டியலே தயார் செய்து வெளியிட்டுள்ளார். அந்தப் பட்டியல்...

1. சங்ககாலத்து அவ்வை. வாழ்ந்த காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு; பாடியவை சங்க நூற் பாடல்கள், அகநானூறு 4, குறுந்தொகை 15, நற்றிணை 7, புற நானூறு 33; ஆக மொத்தம் 59 பாடல்கள். இவருடைய பாடல்களில் சேர, சோழ, பாண்டியன், அதியமான், அவன் மகன் நாஞ்சில் வள்ளுவன் போன்றோர் இடம் பெற்றுள்ளனர். அதியமான் நெல்லிக்கனி கதையும் இதே அவ்வையாரைச் சார்ந்ததாகும்.

2. இடைக்கால அவ்வை. இவர் வாழ்ந்த காலம் 10ஆம் நூற்றாண்டுக்கு முன்னர். பல பாடல்கள் இயற்றியுள்ளார். மூவேந்தரையும் சோழர் அசதியையும் இவர் பாடியுள்ளார். அசதி விக்கிரம சோழன் முதலிய இவரின்



பாடல்களில் கிடைக்கப் பெறும் விஷயங்கள், அங்கவை, சங்கவை.

3. சோழர் காலத்து அவ்வை. இவர் பல பாடல்களை இயற்றியுள்ளார். வாழ்ந்த காலம் 12ஆம் நூற்றாண்டு. ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், நல் வழி, மூதுரை, முதலியன இவர் இயற்றியவை.

4. சமயப்புலவர் அவ்வை. இவர் வாழ்ந்த காலம் 14ஆம் நூற்றாண்டு. இவர் எழுதிய நூல்கள் அவ்வை குறள், விநாயகர் அகவல்.

5. பிற்கால அவ்வை 1. வாழ்ந்த காலம் 16ஆம் நூற்றாண்டு. எழுதிய பாடல்கள் சிலதான் கிடைக்கப் பெற்றுள்ளன.

6. பிற்கால அவ்வை 2. வாழ்ந்த காலம் 17ஆம், 18ஆம் நூற்றாண்டு. இவர் எழுதிய நூல் 'பந்தனந்தாதி'. பந்தன் என்னும் வணிகன் தமிழுக்காகச் செய்ததை வரலாறாக்கிக் கூறப்பட்டுள்ளது.

அதியமான் அளித்த அற்புத நெல்லிக்கனி ஆயுளை நீட்டிக்கும் என்ற வரலாறு காரணமாக அவ்வையை ஒருவரே என்றும் அவர் பல நூற்றாண்டு வாழ்ந்தார் என்றும் எண்ணுவதற்கு ஏதுவாகிறது. ஆயினும், சங்க காலத்து அவ்வையின் ஆளுமையும் கவித்திறனும் பிற்காலத்தில் பல அவ்வையார்கள் அவரைப் பின்பற்றி உருவாகக் காரணமாயிற்று எனலாம்.

சங்க இலக்கியத்தில் கபிலர், பரணர், நக்கீரரோடு அவ்வையாரையும் அதே நிலைக்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். அந்த அளவுக்கு அவ்வையின் கவிதைகளில் கனமும் தளமும் பரவியிருந்தன. அவ்வையின் திறமையைக் குறிக்க இந்த ஒப்பீடும் ஒரு சிறு அம்சம்தான்.

சங்ககால அவ்வையாரின் கவிதைத் திறத்தை மட்டுமே இங்கு பெண் கவிஞர்களில் ஆராய முதன்மையாக எடுத்துக்கொள்ளலாம். இவரின் அகநானூற்றில் இருக்கும் நான்கு பாடல்களும் பாலைத்திணையைக் குறிப்பவை. இவர் தனது சமகாலக் கவிஞர்களான கபிலரையும் வெள்ளி வீதியாரையும் பாராட்டிப் பாடியதிலிருந்து இவரின் பொறாமை அற்ற, திறமையை மதிக்கும் குணம் புலப்படுகின்றது.

நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றும்
செலவயர்ந்திசினால்யானே

என்று வெள்ளிவீதியாரைத் தன் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

அவ்வையாரின் பாடல்களில் அகநானூற்றில்

இயற்கை வர்ணனை மிகுந்து இருக்கிறது.

நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் அம் காட்டு
இலை இல மலர்ந்த முகை இல் இலவம்

விசும்பு விசைத்து எறிந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண் குருகு

வரல் மரம் பொருந்திய சிள் வீடு

போன்ற காட்சிகளை உதாரணமாகக் கூறலாம்.

அவ்வையாரின் பாடல்களில் பறவை, விலங்கு, செடி கொடி, போன்றவற்றைப் பற்றிய குறிப்புகளும் அதிகம் காணப்படுகின்றன. அவரின் ரசிப்பு இயற்கை மீது எப்படி அழுத்தமாய் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதற்கு இவைகள் எடுத்துக்காட்டாய் உள்ளன.

ஊன் பொதி அவிழாக் கோட்டு உதிர்க் குருளை
மூன்று உடன் ஈன்ற முடங்கர் நிகழ்த்த

என்ற புலிக்குட்டிகள் பற்றிய பாடல் மூலம் இதனை அறியலாம். இது போன்றே மான், வெண் குருகு, வண்டு, மீன் ஆகியவற்றையும் தன் பாடல்களில் கொணர்ந்திருக்கிறார் அவ்வையார்.

அவ்வையாரின் உவமை நயத்தையும் அவரின் பாடல்களில் பார்க்க முடிகிறது. இயற்கையில் உள்ள மரம், செடி கொடி ஆகியவற்றைக் கொண்டு காதற்பாடல்களில் அரிய வகையான ஒப்பீட்டு உவமைகளையும் கூறியுள்ளார்.

காமத்தை பேயைப் போன்றதாகவே குறிப்பிட்டிருக்கிறார். காமமும் வெளிக்கூற இயலாதது. ‘பேய் கண்டு அலறின் பிறர் தம்மை பயம் கொண்டவர் என எண்ணுவார்கள் என்பதனால், அதை மறைக்கும் மனிதர்கள், அதேபோன்று காமத்தையும் மனதளவில் இருந்தாலும் வெளிக்காட்டாமல் மறைக்கிறார்’ என்கிறார். ஆனால், காமம், பார்ப்பவர் பார்வைக்கு வெளிப்பட்டுவிடும் என்றும் உரைக்கிறார். ‘வெள்ளம் கரைபுரண்டோட கரையில் உள்ள மரங்கள் வெளியில் வேர் தெரிய தளிர் நடுங்கும். அதுபோல காதலர் நெஞ்சத்தின் நடுக்கத்தைக் கூறுகிறார்.

இயற்கை வர்ணனைகளில் இடி, மின்னல், மழை போன்ற பலவற்றைத் தன் பாடல்களில் கையாண்டுள்ளார். மேலும், மக்களைப் பற்றியும் அவர்கள் வாழும் ஊரின் சூழல் பற்றியும் வரலாற்றுப் பதிவாக அரசர்கள் பற்றியும் பலவிதமான உவமைகளுடன் தமது பாடல்களில் விளக்கியுள்ளார்.

அகநானூறு, குறுந்திணைப் பாடல்களில் மரத்தையும் வெள்ளப் பெருக்கையும் உவமையாகக் கொண்டு காமத்தை விளக்கியது போலவே குறுந்தொகையிலும் அதே பாணி கையாளப்படுகிறது.

‘ஆறு, பரந்து விரிந்து ஓடிக் களித்துப் பின் ஒரு நிலையில் கையளவு நீருடனும் பின் அதுவும் அற்று வறண்டு விடுதல் போன்றே காமமும் விரிந்து பின் குறுகி அற்றுவிடுகிறது’ என்கிறார்.

ஆண்களின் மன இயல்புகளைப் பாடிய அவ்வையார், பெண்ணைப் பற்றியும் அவளின் மென்மை பற்றியும் மனோதத்துவ முறையில் அவர்களின் இயல்பு பற்றியும் எடுத்து உரைக்கிறார்.

அதியமான் அஞ்சியின் மறப்பண்புகளை உரைக்கிறார். அகத்திணைக் காதற் காட்சிகளில் அவ்வையார் புலப்படுத்திய ஆர்வத்தைக் கண்டு அவைகள் பெருந்திணைப் பாடல்கள் என்று கொள்வோரும் உண்டு. இப்பாடல்களை இயற்றியது பெண் தானா என ஐயம் கொள்வோரும் உண்டு.

அவ்வையாரின் போர் பற்றிய கண்ணோட்டமும் அவர் அதியமானுக்காக சென்ற தூதும் வெகு சிறப்புப் பெற்றவை. அது மூன்று நிகழ்ச்சிகளால் முக்கியத்துவம் பெறுகிறது.

அதியமான் சார்பாக தொண்டைமானிடம் அரசியல் தூது போதல், திருக் கோவிலூர் மன்னன் மலையமான் திருமுடிக்காரிக்கும் அதியமானுக்கும் நடைபெற்ற போரில் காரி தோற்றது, பின் தோற்ற திருமுடிக்காரி, சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை துணைகொண்டு, வல்வில் ஓரி அதியமான், சோழ, பாண்டியர்கள் அணிக்கும் இடையே நடைபெற்ற போர் ஆகியன பற்றியதும் ஆகும்.

தொண்டைமானிடம் தூது சென்ற அவ்வையார், அவ்வரசனுடைய படைக்கலத்தைக் கண்டு அதியமானின் படைக்கலத்தை ஒப்பிட்டு பாடிய பாடல் மிகப் பிரசித்தம். இப்பாடல் வஞ்சப்புகழ்ச்சிக்கு (அணிக்கு) முக்கிய எடுத்துக்காட்டாக விளங்கும்.

அதியமானுக்கும் அவ்வையாருக்கும் இடையிலேயான நட்பு இன்றுவரைப் பேசப்படும் ஒன்றாகும். இதுபோன்று அவ்வையாரின் பலநிலைகளிலும் உள்ள பாடல்களைப் பற்றி நாம் கூறிக்கொண்டே போகலாம்.

சங்க இலக்கியம் முதல் இன்று வரை கலைகளின் மையம், கவிதைகளின் மையம் மானுடம் பாடுவதே என்பதை நாம் உணரும் வண்ணம் சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களைக் கண்டோம். இனி, பக்தி காலத்து பெண்பாற் புலவர்களைப் பற்றி காண்போம். பக்தி காலத்தில் பாடப்பட்ட பெண்களில் மிகச் சிறந்த செய்திக்கும் உவமைக்கும் காதலுக்கும் கனவுக்கும் உதாரணமாக ஆண்டாளின் பாடல்கள் உள்ளன.

(தொடரும்)

### கல்பரா

# முதுமையை திரையிடல்

## நோயல் நடேசன்

இப்பொழுது எனக்கு அறுபத்தெட்டு வயது. ஆனாலும் எனது முதுமை எப்படி இருக்கும் என்பதை நான் நினைத்துப் பார்ப்பதில்லை. முதுமை என்பதை 'கல்பரா' திரைப்படத்தை பார்க்கும்போது நான் புரிந்துகொண்டேன். திரையில் படம் ஓடும்போது மன ஓடையில் நான் எனக்கான திரைக்கதையை மனத்திரையில் எழுதியபடியிருந்தேன்.

பன்மொழிப் படங்களைப் பார்க்கும் எனக்கு இப்படியான அனுபவம் இதுவரை எந்த படத்திலும் கிடைக்கவில்லை. வழக்கமான திரைப்படம்போல் இதில் பெரிய நடிகர்கள் கிடையாது, விளம்பரம் கிடையாது; பின்னணி இசைக்கலைஞர், பாடகர் ஏன் முக்கியமான இயக்குனரே இல்லாத படம் இது! ஓரிரு ஆங்கில பத்திரிகைகளில் வந்த குறிப்புகளைத் தவிர, பிரபலமாகப் பேசப்படாதது - ஆனால், மெல்பேனில் நடந்த இந்தியத் திரைப்பட விழாவில் திரையிடப்பட்டது.

முதுமை என்பது இலைகளுக்கு இலையுதிர்காலம் போன்றது. ஆனால், மனிதர்களான நாம் தொடர்ந்தும் வாழ விரும்புகிறோம். அதனால், முதுமை கொடியது என்போர் பலர். உண்மைதான். முதுமையில் உறவுகளின் புறக்கணிப்பு, அதனால் தனிமை, அதன் பின்பு வறுமை என்பன சேர்ந்து கொள்ளும்போது சுமையாகிறது. உடல் மட்டும் கூனவில்லை, உள்ளமும் வளைந்து கூனுகிறது.



சோக்கிரடிஸ், "முதியவர்களிடம் பேசவேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு நூலகம் - அவர்களிடமிருந்து இளம் சந்ததியினர் அறிவைப் பெறவேண்டும்" என்கிறார். ஆனால், நிகழ்கால சமூகத்தில் அறிவு கணினியில் புதைந்திருப்பதால் முதியவர்கள் மூலைகளிலோ முதியோர் இல்லங்களிலோ முடக்கப்படுகிறார்கள். மூன்றாம் உலகநாடுகளில் பலர் தெருவில் அலைபவர்களாகவும் இருக்கிறார்கள். முதுமையின் முக்கிய விடயங்களான மன மறதி, உடல் உபாதை, கண் காதுப்புலன்களது குறைபாடுகள் போன்றவை அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தும்போது, அவர்களைக் கவனிப்பதற்கு, நேரம் பொருள் என்பன தேவையென்பதால் அவர்களைப் புறக்கணிப்பது இலகுவாகிறது. பொருட்களோ மனிதர்களோ எனப் பாகுபாடு இல்லாது தேவையற்றதை இலகுவாக எறியும் காலத்தில் வாழ்கிறோம். ஒரு காலத்தில் பெண் பிள்ளை பெற்றவர்கள் அதிர்ஷ்டசாலிகள், ஆண் பிள்ளைகளால் உதவியில்லை என பேசக் கேட்டுள்ளேன். ஆனால், அது பொய்யானதைப் பல இடங்களில் நானே பார்த்துள்ளேன்.

அதே நேரத்தில் முதுமை என்பதும் ஒரு அதிஷ்டமே. முதுமையடையாது நோயாலும் போராலும் மற்றைய காரணங்களாலும் இறந்தவர்களோடு ஒப்பிட்டால், போர் நடந்த இலங்கை போன்ற நாட்டில், இந்த வார்த்தைகள் எவ்வளவு முக்கியமானது என்பது உங்களுக்குப் புரியும்.

அரைக் கிளாசில் உள்ள நீரைப் பார்ப்பதுபோல் எதையும் இரண்டு விதமாகப் பார்க்க முடியும் அல்லவா? அதைவிட ஆணும் பெண்ணும் துணையாக இறுதிவரை ஒன்றாக வாழ்ந்து முதுமை அடைவது மேலதிகமாக கிடைக்கும் லாட்டரியே! வாழ்வு என்பது ஒரு முறை நிகழ்வே. கிரிக்கெட்டைப்போல் இரண்டாவது ஆட்டம் ஆட கிடைக்காது எனபதோடு அதை முழுமையாக ஆடக் கிடைப்பது கூட எல்லோருக்கும் கிட்டுவதல்ல என்பதும் உண்மை.

'கற்பரா' திரைப்படம் எப்படியிருந்தது என விவரிப்பது கடினம். காரணம், மன ரீதியான உணர்வே - அது ஈடுபடுவருக்கு மட்டும் சொந்தமான உடலுறவின்




சுகம்போல், பார்ப்பவருக்கு மட்டும் உரிய அனுபவம்.

என் அனுபவத்தை எப்படி விவரிப்பது?

உங்களுக்கு அருகில் சிரித்துப் பேசியபடி ஒருவர் நடந்து வரும்போது, அவர் வாகன விபத்தாலோ வேறு விதமாகவோ திடீரென நம்மெதிரே மரணமடைந்தாலோ மறைந்துவிட்டாலோ நமக்கு அந்த நிகழ்வு அதிர்வைக் கொடுப்பதுடன் அந்தக் காட்சி பல நாட்களாக மனத்திரையில் நீங்காது தொடரும் நிழலாக இருக்கும். அப்படியாகத் தவிர்க்கமுடியாத முதுமையை எனது கண் முன்பு கொண்டு வந்து நிறுத்தியது இந்தத் திரைப்படம்.

திரைப்படத்தில் அதிகமான வசனங்களோ பெரிதளவு கதைகளோ அற்று காட்சிகளின் தொகுப்பாக வந்து நமது விழித்திரையை சேரும்போது, நாம் நமக்காக ஒரு கதையை நெசவு செய்யும் நெசவாளியாகிறோம். வண்ணங்கள், கோடுகள் புள்ளிகள் எனப் போட்டு இந்த கதையாக்கும் செய்வது பார்வையாளர்களே. இது வழமையான படங்களைப் பார்ப்பவர்களுக்கு, அவர்களது வேலையில்லை. குறைந்த பட்சம் கதாநாயகியாகவோ கதாநாயகனாகவோ எம்மை எண்ணிப் பரவசமடையலாம். முக்கியமாக எம்ஜிஆர், ரஜினிகாந்த் படங்களில் இது நடந்தேறும்.

'கல்பரா' படத்தின் ஆரம்பத்தில் ஒரு மூதாட்டியின் முகம் திரையில் வருகிறது. அதன்பின் அந்த மூதாட்டியின் மெதுவான இயக்கங்கள் ஆரம்பமாகின்றன.

தமிழகத்தின் பட்டுக்கோட்டையில் உள்ள விவசாய குடும்பத்தில் முதிய ஆணும் பெண்ணும், அந்த குடும்பத்தில் தங்களது இறுதிக் காலத்தை எப்படிக் கழிக்கிறார்கள் என்பதே இங்கு காட்சிப்படுத்தப்படுகிறது.

குடும்பத்தினர் முதியவர்களைப் புறக்கணிக்கவில்லை. அதேநேரத்தில் முதியவர்கள் அவர்கள் குடும்பத்தினருக்குச் சுமையாக இருக்கிறார்கள் என்பதும் உண்மை. வயதான இருவரையும் பிரித்து வைத்து பராமரிக்கிறார்கள். மருமகள் தனது மகன்கள் நாள் முழுவதும் வயதானவரை பார்ப்பதாக முணுமுணுப்பு. அதேபோல் வயதான மூதாட்டி வெளிக்குச் செல்ல கேட்டபோது பேரன் 'கொஞ்சம் பொறு' என்று சொல்லி விட்டு கைப்பேசியை நோண்டுவதும், பின் 'இதிலேயே ஒண்டுக்கிரு' என்பதும் அவர்களை ஒரு சுமையாக அவன் உணருவதைத் தெரியப்படுத்துகிறது. இங்கு கன்றுக்குப் பால்கொடுக்கும் பசுவும் குட்டிகளோடு விளையாடும் பெண் நாயும், குஞ்சுகளைப் பாதுகாக்கும் தாய் கோழியும் அடையாளங்கள் - இளம் தலைமுறைக்கு பாதுகாப்பு உணவு அளிக்கப்படும்போது அதில் ஒரு சிறிய பகுதியாவது திருப்பிக் கொடுப்பதில்லை என்பது பல விதமாகக் காட்டப்படுகிறது. மனித இனத்தில் மட்டுமல்ல, மிருகங்கள் பறவைகளிலும் இதுவே உண்மை என்ற தத்துவம் நமக்குத் தெளிவாகிறது.

கிராமத்தில் அந்த மக்கள் மட்டுமல்ல சுற்றியுள்ள மிருகங்களது நடத்தைகள் மிகவும் இயல்பாக இருந்தது. மாடுகளோடு கோழி, நாய், ஆமை எனக் கால் நடைகள் இங்கு வந்து படத்திற்கு உயிர் கொடுக்கின்றன.

விக்கினேஸ், ரோட்டராமில் விருதுபெற்ற 'கூழாங்கல்' என்ற திரைப்படத்தின் காமரா இயக்குநர். பட்டுக்கோட்டை பக்கத்தைச் சேர்ந்த இளைஞர். அவரே இந்த படத்தின் காமரா இயக்குநர் - இயக்குனர் - வசனகர்த்தா. அவருடன் சேர்ந்து உதவி இயக்குநராக வேலை செய்தவர் ஹசின் ஆதம் - கிழக்கிலங்கையைச் சேர்ந்தவர், வெற்றி மாறனுடன் ஆடுகளத்தில் உதவி இயக்கினாராக இருந்தவர். படம் பார்த்தது மட்டுமல்ல இவர்களோடு மெல்பேனில் சில மணித்தியாலங்கள் பேசவும் சந்தர்ப்பம் கிடைத்தது எனக்கு மகிழ்ச்சியே.

நோயல் நடேசன் <uthayam12@gmail.com>

# சௌவி கவிதைகள்

## ஓவியம்: கிரஹாம் பாய்ட்



### 1. சக்கரங்கள்

அமைதியாக நின்று கொண்டிருக்கும்
சக்கரங்களின் மௌனத்தில் ஒளிந்திருக்கிறது
எத்தனையோ பாதைகளின் விலாசங்கள்

இதுவரை எத்தனை பேரை அழைத்துப்போயிருக்கும்
இன்னும் எத்தனை பேரின் பயணங்களுக்குத்
துணையாயிருக்கும்
மௌனமாகவே நின்றுகொண்டிருக்கின்றன சக்கரங்கள்
பதிலேதும் பகராமல்



இரவு பகல் மழை வெயில்
என எல்லாக் காலத்தையும்
ஒன்றென எண்ணிக்கொள்ளும்
சக்கரங்களின் மனநிலை வாய்ப்பதில்லை எல்லோருக்கும்

தார்ச்சாலைகளில் ஓடி ஓடி
வெறுத்துப்போன சக்கரங்கள்
எப்போதேனும் மண்சாலையில்
பயணிக்க நேர்ந்தால்
நீண்டநாள் பிரிவுக்குப்பின்
காதலியைச் சந்திக்கும்
காதலனென அழுந்த அழுந்த முத்தமிடுகின்றன

நாடெங்கும் சுற்றினாலும் கர்வப்படாத சக்கரங்கள்
அமைதியாகவே இருக்கின்றன
எதுவும் தெரியாதது போல

சக்கரங்களின் சமத்துவம் வியக்கவைக்கிறது
இவற்றுக்குள் நிற வேற்றுமையே கிடையாது
எல்லா ஊர்களிலும் எல்லா நாடுகளிலும்
ஒரே நிறத்தோடே வாழ்கின்றன

மூச்சிருப்பதெல்லாம் உயிரியென்றால்
மூச்சுப்போனால் இயக்கத்தை நிறுத்திக்கொள்வதெல்லாம்
உயிரியென்றால்
சக்கரங்களையும் உயிரியெனலாம்
காற்றுப்போனால் இயக்கம் நின்றுவிடுகிறது

ஓடி ஓடி உறுப்புக்கள்
தேய்ந்தாலும்
ஓய்வெடுக்க விடுவதில்லை
சக்கரங்களை

உயரத்திலிருந்து தள்ளப்படும்
சரக்குகள்
அடிபடாமலிருக்க அவற்றின்மீதே
தள்ளப்படுகின்றன

அப்படித் தள்ளப்படும்போது
அச்சக்கரங்கள் வெளிப்படுத்தும்
பெருமூச்சு
இன்னும் இறக்கவில்லை
என்பதையே உறுதிப்படுத்துகின்றன

எப்போதும் சக்கரங்கள் ஓய்வதில்லை
சக்கரங்கள் ஓய்ந்துவிட்டால
பூமிக்கு சுழற்சியில்லை



## 2. தூண்டில்கள்

எல்லோருடைய கைகளிலும்
தூண்டில்கள் இருக்கின்றன
சிலர் வெளிப்படையாக வைத்திருக்கிறார்கள்
சிலர் மறைத்து வைத்திருக்கிறார்கள்
எல்லாத் தூண்டில்களுக்கும்
எப்படியேனும் மாட்டிவிடுகின்றன மீன்கள்

சிலர் தூண்டில்களை
உபயோகித்துக்கொண்டேயிருக்கிறார்கள்
சிலர் வேண்டும்போது உபயோகிக்கிறார்கள்
சிலர் அடிப்படைக்கு மட்டும் உபயோகிக்கிறார்கள்

சில தூண்டில்கள் மீன்களைத் தேடிப்போகின்றன
சில தூண்டில்களில்
மீன்கள் தானாகவே வந்து மாட்டிக்கொள்கின்றன
தூண்டில்களின் பிரயோகத்தை மட்டும்
புரிந்துகொள்ளவே முடியவில்லை

சிரித்துப் பேசிக்கொண்டிருப்பவனின் தூண்டிலுக்கு
மீனாவது நீங்களாகவுமிருக்கலாம்
சிலர் பசிக்கு சிலர் ஆசைக்கு
சிலர் வியாபாரத்திறகு சிலர் எதிர்ப்புக்கு
சிலர் பொறாமைக்கு என
தூண்டிலை வீசியபடியேயிருக்கிறார்கள்

இத்தனை பேருக்கு மத்தியிலே
நான் சந்தித்துவிடமேண்டுமெனத்
தேடிக்கொண்டேயிருக்கிறேன்
தூண்டில் வைத்திருக்காத ஒருவனை

சௌவி <souvi36@hotmail.com>

# பேகம் கதீஜாவின் சாமானிய ஜீவிதம்

பொ. கருணாகரமூர்த்தி

பேகம் கதீஜாவின் சாமானிய ஜீவிதம் - எம்.எம். நௌஷாத்; பக்கங்கள்: 188, விலை: 900 ரூபா / 220₹; வெளியீடு: கஸல் பதிப்பகம்; தொலைப்பேசி & வாட்ஸ் அப்: +94 77 549 4977; மின்னஞ்சல்: mail@ghazal.press

அண்மைக்காலத்தில் தமிழில் வெளிவந்த நாவல்களில் எம்.எம். நௌஷாத்தின் 'பேகம் கதீஜாவின் சாமானிய ஜீவிதம்' கவனிக்கப்பட வேண்டிய ஒரு பிரதியாகும். இலங்கை சாஹித்ய அகெடமியின் 2023ஆம் ஆண்டின் சிறந்தநாவலுக்கான விருது இந்நாவலுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது.

இலங்கையின் ஊவா மாகாணத்தின் மொனராகல மாவட்டத்தில் அமைந்துள்ள மின்சார வசதிகளற்ற சாம்பல் மேடு எனும் குக்கிராமத்தில், உழைத்துக் காப்பாற்ற ஆண் துணையற்ற வறிய குடும்பமொன்றில் பிறந்த பேகம் கதீஜா எனும் பெண்மணியின் சாமானிய ஜீவிதம், வைக்கம் முகமது பஷீரின் மொழியை ஒத்த ஒரு எளிய மொழியில் எம்.எம். நௌஷத்தினால் சொல்லப்படுகின்றது.

அனைத்து நாடுகளிலும் இஸ்லாமியர்களிடத்தில் பொதுவாக வழங்கப்படும் பேகம் எனும் அடைமொழியின் சொற் பிறப்பியலை ஆராய்ந்தால் அது மூலமொழியாகிய அரபியமொழியில் இளவரசி என்றும், துருக்கியிலும் பெர்ஸியிலும் உருதிலும் சுல்தான்களின் / படைத்தளபதிகளின் செல்ல மகள்களையும் விளிப்பதாகத் தெரியவருகிறது.



சமூகத்தால் ஒரு விதவையைப் போலக் கைவிடப்பட்ட ஏழை உம்மும்மாவினால் வளர்க்கப்படும் பேகம் கதீஜாவின் வாழ்க்கையும், அவர் பொருண்மியத்தால் இளமையிலும் திருமணத்தின்பின் பிசினாரித் தனங்கொண்ட கணவனோடான வாழ்க்கைக் காலத்திலும் அதன்பின்னான காலத்திலும், பிள்ளைகளின் உதாசீனத்தாலும் வறுமையுடனானதாகவே அமைந்திருப்பது, ஒரு முரண்நகையாகவே முதலில் தோன்றும். ஆனால், கதீஜாவோ வேலைக்குப் போனவிடத்தில் தன்னைத் தடவிப் பார்க்க விழைந்த ஒரு கயவனை யாரோ கத்தியால் குத்திவிட்டார்கள் என்று அறிந்ததும், 'அல்லாவே அவனைக் காப்பாற்று சாகவிடாதே......' என்று மன்றாடுபவளாக, என்றும் மனத்தளவில் கபடுபடாத இளவரசியாக, மாசற்ற மகாராணியாக வாழ்வதாகப் படைத்திருக்கிறார் எம்.எம். நௌஷாத்.

அதிகம் பாத்திரங்கள் இல்லை. பேகம் கதீஜா, அவளது உம்மும்மா, கணவன் ஹாதி சுல்தான், அவனது உம்மா, சாம்பல்மேட்டுக்கு ஹாதி சுல்தான் புலம்பெயர்ந்த காலத்திலிருந்து அவனது காலம் முழுவதும் நண்பனாகத் தொடரும் ஸாஹிபு, அவனது தாயாராகவும் அனைவருக்கும் வில்லியாகவும் வரும் சூனியக்காரி, இவர்கள் பிரதியின் தலைமைப் பாத்திரங்கள்.

புதினத்தின் ஆரம்ப அத்தியாயங்களில் கதீஜாவின் இளமைக் காலத்தைய பள்ளித்தோழனும் முன்படி மாணவனுமான அர்பாகான்; வகுப்பில் நன்கு படிக்கக்கூடிய அவளது கல்வியில் அக்கறைகொண்டு உதவிகள் செய்வதுடன், அவளின் படிப்பு நிறுத்தப்படும் கட்டம் வந்தபோது, அவளது உம்மும்மாவிடம் சென்று, 'அம்மா கதீஜாவின் படிப்பை மட்டும்

நிறுத்திடாதீங்கம்மா. அவள் கெட்டிக்காரி, ஒரு சமயம் டாக்டராகவும் வரலாம்" என்றெல்லாம் எடுத்துக்கூறி மன்றாடும் மகேஸ்வரி டீச்சர்; முஸ்தாபா வாத்தியார்; தினமும் வந்து வந்து உம்மும்மாவுக்கு உருப்போட்டு அவளை மூளைச்சலவை செய்து கதீஜாவைக் ஹாதி சுல்தானுக்கு வலிந்து திருமணம் செய்துவைத்த பிறிதொரு சாகசக்காரி ஜொகரா; திருமணமான பின்னால் கதீஜா பெற்றுக்கொண்ட அவளது பள்ளிசெல்லும் பிள்ளைகள் ஜமால், பதுரு, லைலா, ஜெமீலா; கதீஜாவின் அழகிய மகள் லைலாவுக்கு வலைபோடும் பள்ளிவாசல் மௌலவி ஹாஜியாரின் மகன் (அவன் பெயரும் பிரதியில் சொல்லப்படுவதில்லை); ஆகியோர் நாவலில் வரும் உப பாத்திரங்களாவார்.

பேகம் கதீஜாவை அடுத்து பிரதியில் அதிக பரப்பில் வாழ்ந்திருக்கும் அடுத்த பாத்திரம் அவளது புருஷன் ஹாதி சுல்தானே.

ஹாதி சுல்தான் ஜாம் பறங்கிவத்தை என்கிற இடத்தில் ஒரு மத்தியதர / கீழ் மத்தியதரக் குடும்பத்தில் பிறந்தவொரு பிள்ளை. ஜாம் பறங்கிவத்தையின் அமைவிடம் எங்கே எனும் விவரணம் புதினத்தில் இல்லை. அவனுடைய வாப்பாவுக்கு அவரின் தந்தைவழிச் சொத்தாக பெரிய தோட்டம் இருப்பதையிட்டு அவருக்கு விவசாயமோ காலநடை வளர்ப்போ தொழிலாக இருந்திருக்குமென்று வாசகர் ஊகித்துக் கொள்ளலாம்.

இயல்பாகச் சென்றுகொண்டிருந்த அவர்களின் குடும்பம் ஹாதி சுல்தானின் வாப்பா சூதாட்டப் பழக்கத்துக்கு ஆளானதும் தடுமாறத் தொடங்குகிறது. சூதாட்டத்துக்கு அடிமையாகியதுடன் குடிகார / கூடா நட்புக்களையும் சேர்த்துக்கொள்ள ஆரம்பித்ததும் அவர்களின் பொருளாதார ஸ்திரத்தன்மை மெல்ல மெல்ல அதலபாதாளம் நோக்கி விரைகிறது. அவர்களது வீட்டிலிருந்த பொருட்களும் வாப்பா படும் கடன்களால் ஒவ்வொன்றாக இல்லாமலாகி ஜாம் பறங்கிவத்தையும் விலைப்பட்டுப் போக அவர்கள் குடும்பம் அவ்விடத்தைவிட்டு வேறொரு இடம்நாடிப் போகிறது. அக்குடும்பத்தில் ஹாதி சுல்தானின் வாப்பா, உம்மா தவிர வேறுயாரெல்லாம் இருந்தார்கள் என்ற விவரங்கள் புதினத்தில் இல்லை. ஹாதி சுல்தானது உம்மா எவ்வளவோ தடுத்தும் இனிமேல் வாழவேறு வழி இல்லை என்கிற கையறுநிலையில் ஜாம் வத்தையிலிருந்து 100 மைல்கள் தொலைவில் மொனராலை - பதுளை வீதியில் 16ஆவது மைலில் கிழக்காகக் கிளைத்து இருமருங்கும் இரப்பர்த் தோட்டங்களும் அடர்காடும் செறிந்திருக்கும் பராமரிப்பின்றிக் குன்றுங்குழியுமாக இருக்கும் ஒடுக்கமான வீதிவழி சென்றால் அடையக்கூடிய 'சாம்பல்மேடு' எனும் குக்கிராமத்துக்குச் செல்ல ஹாதி சுல்தான் புறப்படுகிறான். அவனது உம்மா தந்துவிட்ட சிறியதொகை பணத்துடன், ஒரு பழைய பயணவுறையுள் சாரம் ஷேர்ட்டென இருந்த இரண்டொரு உடுப்புகளையும் திணித்துக்கொண்டு, இன்னொரு பக்கேஸ்பெட்டியுள் காடுகளை வெட்டக்கூடிய கத்தி, கோடரியன்ன ஆயுதங்களுடன் ஒரு மண்வெட்டியையும் எடுத்துக்கொண்டு பேருந்து, மாட்டுவண்டி என்று பலவாகனங்களிலுமாக மாறிமாறிப் பயணித்து மெல்லமெல்ல வந்து ஊரின் எல்லையில் அவனை விடவும் இளையவனான ஸாஹிபுவைச் சந்திக்கின்றான். ஊருக்கு அந்நியனாக இருக்கும் அவனது வருகை ஸாஹிபுவை ஆச்சரியப்படுத்தவும் அவனை அணுகி, `நீங்க யார், எங்கிருந்து வருகிறீர்கள், எங்கே போகிறீர்கள்' என்று கிராமத்தவர்களுக்கேயுரிய வெள்ளந்தியான ஆர்வத்துடன் கேட்டு அறிய முற்படுகிறான்.

நீண்ட பயணத்தால் களைத்துப் போயிருந்த சுல்தானுக்கு ஸாஹிபு தன் வீட்டிலிருந்து தண்ணீர் எடுத்துவந்து கொடுத்து உபசரிக்கிறான். அன்றிலிருந்து ஸாஹிபுவின் நட்பு சுல்தானின் ஆயுள்பரியந்தம் தொடர்கிறது. இதே சாம்பல்மேட்டில் வருடந்தோறும் நடக்கும் கார்னிவலைப் போன்ற 'கந்தூரி' எனும் விழாவுக்குச் சின்னவயதில் அவன் தன் வாப்பாவுடன் முன்னரே வந்துமிருக்கிறான். அந்த ஊரும் காடும் அதன் வெள்ளந்தி மனிதர்களும் அவனுக்கு அப்போதே பிடித்துப் போகிறது. ஹாதி சுல்தானுக்கு இயற்கையிலேயே காட்டுமரங்களின் மணமும் மண்ணின் மணமும் மிகவும் பிடித்த விடயங்கள். அத்துடன் வீட்டுவளர்ப்பு மிருகங்களையும் பிள்ளைகளைப்போல நேசித்துக் கவனமாகப் பராமரித்து வளர்க்கும் கலையும் தெரிந்திருந்தது.

அந்த ஊரை அண்டிய காட்டுப் பிரதேசத்தைச் சுற்றிவந்த ஹாதி சுல்தான் தனது கனவான விசாலமான தோட்டம் ஒன்றை அமைப்பதற்கு இசைவான மண்வளமும் பொருத்தமான இடஅமைவுமுள்ள காடொன்றைக் கண்டுபிடித்து அங்கே காட்டின் கம்புகளை வெட்டி நட்டு அதற்கொரு எல்லையையும் உண்டாக்கி, மெல்ல மெல்லப் பண்படுத்தத் தொடங்கினான். நாளடைவில் அதற்குள் வீடொன்றையும் கிணற்றையும் அமைத்துக்கொண்டு தன் பாட்டனின் பிதுரார்ஜிதச் சொத்தான விலைப்பட்டுப் போன ஜாம் பறங்கித் தோட்டத்தின் பெயரையே இத்தோட்டத்துக்கும் வைத்துக்கொண்டு அங்கேயே வாழத் தொடங்குகிறான்.

புதினத்தின் முதனமைப் பாத்திரமான பேகம் கதீஜாவும் இதே சாம்பல்மேட்டைப் பிறப்பிடமாகக்கொண்ட பெண்தான். துடுக்குத்தனம் நிறைந்த வாயாடி. கையில் கிடைத்த மாம்பழமொன்றைத் தன்கூரிய பற்களால் கடித்து இழுத்துச் சுவைத்துக் கொண்டிருக்கிறாளெனப் புதினத்தில் அறிமுகமாகிறாள்.

பேகம் பிறப்பின்போதே தன் உம்மாவை இழந்தவள். வாப்பாவும் ஓடிப்போய்விட உம்மும்மாவினால் தனித்து வளர்க்கப்படுகிறாள். உம்மும்மா அயலிலுள்ள



வசதியான வீடுகளில் சமைத்தல், உடைகளைத் துவைத்தல், வீட்டைத்துப்புரவாகப் பராமரித்தலாகிய சிற்றூழியங்களைச் செய்துகொண்டு வாழ்க்கையைத் தள்ளுகிறார்கள், அவர்களுக்குக் கஷ்டஜீவனம் என்பது சொல்லாமலே புரிந்துகொள்ளமுடியும்.

அத்தனை வறுமையிலும் கதீஜாவை உம்மும்மா கறாராகக் கட்டுப்பாடாகத்தான் வளர்த்தார். முந்தானையைப் போடாமல் வெளியே போவதுபோன்ற உம்மும்மா விரும்பாத சாங்கியங்கள் எதையாவது கதீஜா செய்தாளானால் அவள் வைத்திருக்கும் பிரம்பு இவளின் பிட்டத்தைப் பதம் பார்த்துவிடும். ஆண்களின் அசூசையான பார்வைகளும் நிழல்கள் எதுவும் கதீஜாவின் மீது விழுந்துவிடக் கூடாதென்று அவளைப் பொத்திப் பொத்தி வளர்த்தாள் உம்மும்மா. இயற்கையை ஆராதிக்கும் விருப்புள்ளவளான கதீஜா பச்சை மரங்களையும் மூங்கில் காட்டையும் கொடிகளையும் கபில மண்ணையும் விரும்பினாள். உம்மும்மா வாங்கிவரும் `செரி' சிவப்பு நிறக் கொண்டையுடைய சேவலுடன் பேசுவாள். படிப்பிலும் சூட்டிகையான கதீஜா தன் பள்ளிக்கூடத்தில் முன்படி மாணவனாகப் படித்த அபர்கானுடன் சேர்ந்து காடு மேடெல்லாம் சுற்றிக்கொண்டு திரிவாள். சாம்பல்மேட்டை சூழவுள்ள காடுகளின் இயற்கை அழகும் பசுமையும் எம்.எம். நௌஷாத்தின் தூரிகையில் அழகுற வடிக்கப்பட்டுள்ளன. பேகம் கதீஜாவுக்கு அக்காடுகளுக்குள் நுழைந்து தூரவுள்ள இடங்களுக்குச் சென்றுபார்க்கப்பிடிக்கும். ஒருமுறைஉம்மும்மாவுக்குத் தண்ணி காட்டிவிட்டு அர்பாகானுடன் சேர்ந்து காட்டினுள் புகுந்துவிடுவாள். பொழுது காட்டினுள் கடுகி இருட்டிவிட அவர்களுக்கு யானைகள் நிறைந்ததாக அஞ்சப்படும் அக்காட்டிலிருந்து இரவுக்குள் வீட்டுக்குத் திரும்பிட முடியவில்லை. ஊரே அவர்களைக் காணாமல் தவித்திருக்க மறுநாள் பொழுதுபுலர்ந்தபின் ஊர்வந்து சேர்ந்தார்கள்.

இன்னொருமுறை கதீஜா தன்கூட்டுச் சிறுமிகளுடன் சேர்ந்துகொண்டு புளியமரமொன்றில் ஏறிப் புளியங்காய் உலுப்பியதை அவர்களின் தூரத்து உறவினளான ஜொகரா எனும் சாகஸக்காரி உம்மும்மாவிடம் கண்மூக்குஎல்லாம்வைத்து, 'நான்என் கண்ணால் கண்டன், றோட்டால போற ஆம்பிளைங்க எல்லாம் உவளின் வளர்ப்புச் சரியில்லை என்று ஏசிட்டுப்போனாங்க' என்று வத்திவைத்து அவளுக்கு அடியும் வாங்கிக் கொடுத்தாள். கதீஜா படிப்பிலும் சுட்டியாக இருப்பது ஜொகரா சாகஸக்காரிக்கு ஒத்துக்கொள்ளக் கஷ்டமாக இருந்ததோ என்னமோ, உம்மும்மாவிடம் அடிக்கடி வந்து, 'பெரியவளாகிவிட்ட கதீஜாவை இனிமேல் பள்ளிக்கூடத்துக்கெல்லாம் அனுப்பாதீக... இன்னும் அவள் பாடசாலைக்குப் போய்க்கொண்டிருந்தால் கெட்டுச் சீரழிந்து போய்விடுவாள்.. அவளுக்கொரு திருமணத்தை முடித்துக்கொடுத்துவிடு' என்று `அரிபட்டி' போடத் தொடங்கினாள். 'கலியாணத்துக்கு எல்லாம் என்ன இப்ப அவசரம், அவள் ரொம்பச்சின்னப்புள்ள பாவம் படிக்கட்டும்,' என்று உம்மும்மா மறுக்கவும், 'அவள் ஒன்னோட இருந்து என்ன சொகத்தைக் கண்டா; அவ மொகத்தைப் பாத்தியா சோகைபிடிச்சிருக்கு. தோல் காஞ்சி கருவாடாட்டமிருக்கு. அவள இப்பிடியேவிட்டா இனிப் பாக்கறவங்க கொரங்கென்றுதான் சொல்லுவாங்க. அவளக் கட்டிக்கொடுத்து விடு, நல்லாய் வாழட்டும். இப்போ ஹாதியைப் பார் எங்கிருந்தோ வந்தாலும் என்ன மாதிரியான உழைப்பாளி. தினமும் பாடுபட்டு உழைத்துத் தன்தோட்டத்தை எப்படி உருவாக்கி வைத்திருக்கிறான். அவனுக்கே கதீஜாவைக் கட்டிக் கொடுத்தாயானால் அவர்கள் இருவரும் சந்தோஷமாகத் தம்பாட்டில் வாழுவார்கள்' என்று விடாமல் ஓதி ஓதி உருவேற்றினாள்.

ஹாதியின் மேன்மையை ஜொகரா வர்ணிக்க வர்ணிக்க மெல்ல மெல்ல உம்மம்மாவின் மனம் மாறத்தொடங்கியது. கதீஜாவை ஹாதி சுல்தானுக்கு மணம் முடித்து விடுவதென்பதில் ஜொகரா வெற்றிபெற்று விடுகின்றாள்.

புதினத்தில் ஆரம்ப அத்தியாயத்தில் வந்து, ஹாதி - கதீஜா திருமணம் முடிந்தவுடன் மறைந்துவிடும் ஜொகரா என்பவள், பேகம் கதீஜா குடும்பத்துக்குத் தூரத்து உறவுக்காரியெனச் சொல்லப்படுகிறதே

தவிர, அவள் ஏன் கதீஜாவை சுல்தானுக்குக் கட்டிவைத்துவிட வேண்டுமென்பதில் இத்தனை முனைப்பாக இருந்தாள் என்பதற்கு ஆசிரியர் பிரத்தியேகக் காரணமெதையும் பிரதிக்குட் சொல்லவில்லை. ஜொகரா ஒரு சாகஸக்காரி என்பதோடு சரி.

கதீஜா பிறந்ததிலிருந்து ஒரு உண்டியலுக்குள் உம்மும்மா சிறுகச் சிறுகச் சேமித்து வைத்திருந்த சிறுதொகை பணத்தின் உதவியுடன் மிக எளிமையான முறையில் அவர்கள் திருமணம் நிறைவேறுகிறது. பேகம் கதீஜா - ஹாதி சுல்தான் திருமணத்துடன் ஹாதியின் உம்மாவும் இவர்களுடன் சேர்ந்துவாழ ஜாம் பறங்கித் தோட்டத்துக்கே வந்துவிடுகிறார்.

புதினங்களையிட்டு ஒரு சொல்வழக்கொன்று வலம்வந்துகொண்டுள்ளது, அது எக்காலத்தில் எவ்விடத்தில் எவ்விலக்கியரால் முதலில் பகரப்பட்டதென்று எனக்குத் தெரியவில்லை. அதாவது, `ஒரு நாவலாசிரியனின் வேலை தன் பாத்திரங்களை அவரவர் குணாதியங்களுடன் படைத்துவிடுவது மட்டுந்தான். அப்பாத்திரங்களே தம் இயல்புகளுக்கமையப் பிரதியைத் தாமாகவே புனைந்துகொண்டு விடுவார்கள்' என்பது.

மேற்படி கூற்றின் ஒரு நனோவீதங்கூட எனக்கு உடன்பாடானதாயில்லை. ஒரு படைப்பின் ஒவ்வொருசொல்லிலும் ஒவ்வொருசொல்லியத்திலும் ஆசிரியனின் தேர்வும் புனைவும் செதுக்கலும் இல்லாவிட்டால் அவனே அப்பனுவலுக்கு அன்னியமாகிடுவான்.

பேகம் கதீஜாவின் வாழ்வைப்பேசும் இப்புதினத்திலும் பேகம் கதீஜாவும் அவள் கணவன் ஹாதி சுல்தானும் அவரவர் பலம் பலஹீனங்களுடன் செம்மையாக வார்க்கப்பட்டுள்ளார்கள். ஹாதியினுள் மனுஷன் பாதி, மிருகம் பாதி உறங்கிக் கிடக்கிறான். ஹாதி கடுமையான உழைப்பாளி. தன் வியர்வையை சிந்தி சிந்தி கடுமையா உழைத்து தனது ஜாம் பறங்கித் தோட்டத்தை உருவாக்குகின்றான். அங்கே சோளம், கொக்கோ, மரவள்ளி, இதர காய்கறிப் பயிர்களைப் பயிரிடுவதில் தனது பகலையும் இரவையும் பயன்படுத்துகின்றான். ஹாதியின் இளமைக்கால வாழ்வு புதினத்தில் அவ்வளவாகக் காட்சிப்படுத்தப்படவில்லை. காலத்துக்கமைய சில மென்மையான நாகரிகங்கள், பழக்க வழக்கங்கள் அவனிடம் இருப்பதில்லை. வீட்டில் சமையல் முடிந்துவிட்டால் தன் பாட்டுக்கு ஒரு மிருகத்தைப்போல வாயையுமுறிஞ்சிக்கொண்டு வேகமாகச் சாப்பிட்டு எழுந்துவிடுவான். கதீஜாவுக்கு உணவு இருக்கின்றதா இல்லையா என்ற அக்கறைகள் அவனுக்கு இருக்கவே இருக்காது. ஹாதியின் இள வயதிலிருந்தே அது போன்ற நாகரிகமான பழக்க வழக்கங்களை அவனது உம்மா சொல்லி தரவில்லையெனவே வாசகர் கருதலாம்

ஹாதி சுல்தான் சாம்பல்மேட்டுக்கு குடிபெயர்ந்து வரும்போதே அவனது உம்மா ஒரு விண்ணப்பம்போல அவனிடம் சொல்லிவிடுகிறார்:'மகன் சூதுப் பக்கமும் குடிப் பக்கமும் போய்விடாதடா... உங்க வாப்பாவைச் சாய்த்து வீழ்த்தியவையே அந்தப் பழக்கங்கள்தான்". ஆனால், நடைமுறையில் நட்டுவக்காலியை ஓதி நாக பாம்பாக்கிடலாம் என்பதைப்போல அவனை ஓதிக் குட்டிச்சுவராக்கக் கூடிய நட்புக்களே அவனுக்கு வாய்க்கிறார்கள். அவனது நண்பன் ஸாஹிபுவும் குடிகாரந்தான். ஆனால், மிக அரிதான சந்தர்பங்களில் சேர்ந்து குடித்திருக்கிறார்கள் எனினும் அவனே பெரிதாக ஹாதியைக் குடிக்க வைத்துக் கெடுத்தான் என்று சொல்ல முடியாது.

பேகம் கதீஜா ஆளாகி அழகியாக இருந்தபோது அவளை மணக்க ஸாஹிபு ஆசைப்பட்டான். ஸாஹிபு தன்விருப்பத்தை உம்மாவிடம் தெரிவிக்கவும், அவரும் ஹதீஜாவின் உம்மும்மாவிடம்போய் அவளைச் ஸாஹிபுவுக்குக் கட்டிக்கொடுக்கும்படி கேட்கிறார். குடித்துக்கொண்டு திரிந்த ஸாஹிபுவைக் கண்டாலே உம்மும்மாவுக்கு ஆகாது. அவரை விரட்டியடிக்காத குறையாக மறுத்து அனுப்பிவிடுகிறார்.

ஹாதி சுல்தான் - பேகம் கதீஜாவின் திருமணத்தின் பின் புதிய இடத்தில் பிடுங்கி நடப்படும் ஒரு இளம் பயிரைப்போல கதீஜா மிகவும் கஷ்டப்படுகிறாள். ஒரு தேனீரைக்கூட ருசியாக முறைப்படி வைக்கத்தெரியாத கதீஜாவுக்கு அவளது மாமியார் குறைந்தபட்ச ஒத்தாசையைக்கூடத் தருவதில்லை. அவளுக்கு உரியபடி சமைப்பதற்கு அவளது உம்மும்மா கற்றுத் தரவில்லை என அவளைத் தினமும் ஹாதியும் மாமியாரும் கிண்டலடித்தபடி இருக்கின்றனர். இது போன்ற வீட்டு வேலைகளில் கணவனும் மாமியாரும் தரும் கக்கிஷங்களைப் பொறுத்துக்கொண்டு நாளடைவில் அவள் சமையல் கலையிலும் தேறி விடுகின்றாள். திருமணமான சொற்ப காலத்தில் மாசமாகி விடும் கதீஜாவுக்கு சரியான பராமரிப்பு வைத்திய அனுசரணைகள் கிடைப்பதில்லை. தீராத வாந்தியுடனும் தலை சுற்றலுடனும் அவதிப்படும் கதீஜாவுக்கு நாட்டு மருத்துவிச்சியின் குடிசைகளும் கஷாயங்களும் மட்டுமே கொடுக்கப்படுகின்றன. விளைவாக அவளுக்கு குருதி அமுக்கம் அதிகமாகி வயிற்றில் இருக்கும் சிசுவையும் அவசரத்தில் பிறப்பிக்க வேண்டிய துர்நேர்கையும் நிகழ்கிறது.

கதீஜாவுக்கு ஆட்டுக்குட்டிகளில் விருப்பம் என்பதற்காக காட்டில் நீண்ட கம்புகளை வெட்டிவந்து கொட்டிலைப் போட்டு அவளுக்கு சிறிய ஒரு ஆட்டுப் பண்ணையையும் கொக்கோப் பழங்கள் தின்னப் பிடிக்கும் என்பதற்காக அவளுக்கொரு கொக்கோத் தோட்டத்தையுமே அமைத்துக்கொடுத்து விடுகிறான், ஹாதி சுல்தான். ஆட்டுக் குட்டிகளையே தினமும் கட்டிக் கொஞ்சிக் கொண்டிருந்த கதீஜாவுக்கு அடுத்து அடுத்து இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளுமாக நான்கு குழந்தைகள் பிறக்கின்றன.

அக்குழந்தைகள் மெல்லமெல்ல வளர்ந்து வளரிளம் பருவத்தை அடையும் அவத்தை (Phase)யில் புதினம் இவ்விடத்தில் ஒரு சிறுபாய்ச்சல் பாய்கிறது. ஆனால், பெற்றோருக்கும் குழந்தைகளுக்குமான ஊடாட்டங்கள், பாசப் பரிமாற்றங்கள்; ஹாதி சுல்தான் எப்படித் தன் குழந்தைகளை அள்ளிக் கொஞ்சினான், அவர்களுடன் நெருக்கமாக இருந்தான், விளையாடினான்; அவர்கள் பள்ளிக்கூடம் செல்வதும் படிப்பதாகிய சாங்கியங்கள் எதனையும் பிரதிக்குள் காண்பதற்கில்லை.

ஹாதி சுல்தான் ஒரு வந்தேறிப் பக்கிரியாக சாம்பல்மேட்டுக்கு வந்து, ஊருக்குள்ளுள்ள காட்டு நிலத்தைக் கண்டடைந்து அதை நாளா வட்டத்தில் சீர்படுத்திப் பெரியதோட்டத்தையும் கிணற்றையும் அமைத்துக்கொண்டு ஒரு சுல்தானைப் போலவே வாழ்கிறான். ஊர்ப் பள்ளிவாசலின் பரிபாலன சபையின் உறுப்பினராகி விடவேண்டும் என்கிற ஒரு இரகசிய ஆசையும் உள்ளூர வந்தபின்னால் புதுச்சாரமும் ஷேர்ட்டும் செருப்பும் அத்தர்ப் பூச்சும்பவிஸுமாகத்திரிகிறான். ஊருக்குள் பலருக்கும் ஹாதி சுல்தான் மேல் பொறாமைத் தீயை வளர்த்ததைப்போல் ஸாஹிபுவின் உம்மாவுக்கும் வளர்த்திருப்பது புரியக்கூடியதே. அவர் தன் மகனுக்கு பேகம் கதீஜாவை மணம் முடித்துவைக்க விரும்பியதும் வாஸ்தவந்தான். கதீஜா குடும்பத்துக்கு எதிரானவர்கள் எல்லோரினுள்ளும் முதன்மையானவள் ஸாஹிபுவின் உம்மாதான். (அவர் பெயர் தரப்படவில்லை) அவர் பொறாமை காரணமாக ஹாதி சுல்தான் பிரியமாக வளர்க்கும் ஆடுகளுக்கு நஞ்சூட்டுவதிலிருந்து தோட்டத்தின் வேலிகளுக்குத் தீ மூட்டுவது, மிளகுச் செடிகள் மீது மண்ணெய்யை ஊற்றுவதென்று அவர்களுக்குச் செய்யும் நட்டணைகள், கக்கிஷங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

அவற்றின் விளைவாக ஒருநாள் ஸாஹிபுவின் உம்மா ஹாதியின் ஆடுகளுக்கு ஊட்டுவதற்கு வைத்திருந்த நஞ்சைத் தந்திரமாக ஹாதி சுல்தான் எடுத்து அவள் சாப்பிடுவதற்காக வைத்திருந்த சோற்றுக்குள் கலந்துவைத்து அவளைக் கொன்றும் விடுகிறான்.

அவள் எப்படிப்பட்டவளாக இருந்தாலும், `என் நண்பனின் உம்மாவைக் கொன்றுவிட்டோமே' என்கிற கழிவிரக்கமும் மன சாட்சியும் அவனைத் துன்புறுத்தத் தொடங்கவும் கதீஜாவுக்குத் தெரியாமல் இரகசியமாகத் தினமும் குடிக்க ஆரம்பிக்கிறான். சிலவேளைகளில் அவளிடம் பிடிபட்டுப்போனாலும், ``இந்தச் சமாச்சாரத்தைக் கண்டுங்காணாமல் இருப்பதுதான் உனக்கு நல்லது" என்று அவளை மிரட்டவுஞ் செய்தான். அவளின் மாமியாரும், `என்பிள்ளை கடுமையாக வேலை செய்வதால் வரும் அசதியைப் போக்கக் கொஞ்சம் குடிக்கிறான்' என்று மகனுக்காக சல்ஜாப்புகள் சொன்னாள். ஹாதி சுல்தான் காலவோட்டத்தில் குடிக்கே அடிமையாகி, ஈரல் கெட்டுப்போய் இரத்த வாந்தியாக எடுத்து எடுத்து மரணித்துப் போகிறான்.

எம் பிள்ளைகள் எம்மூலம் பிறந்தவர்களே அல்லாமல் எம் சிந்தனைகள் செயல்களையெல்லாம் அனுவதிப்பவர்களாக இருக்கவேண்டிய அவசியம் எதுவும் அவர்களுக்கில்லை. கதீஜாவின் பிள்ளைகளில் மூத்தவன் ஜமால் பொறியாளராகியதும் தன் இஷ்டத்துக்கு ஒரு செல்வந்தப் பெண்ணின் பின்னால் சென்றுவிடுகிறான். அவனால் ஒருவித அரவணைப்போ பொருண்மிய உதவிகளோ தாய்க்கோ தங்கையருக்கோ கிட்டுவதில்லை.இரண்டாவது மகன் பதுரோ,ஒருதிருட்டுடன் கூடிய கொலைகாரனாகித் தலைமறைவு வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

ஹாதி சுல்தானின் மறைவுக்குப் பின் மீண்டும் அவர்கள் குடும்பம் பொருண்மிய நலிவால்த் தள்ளாடுகிறது. இவ்விடத்திலேயே இனி இருக்கும் இரண்டு குழந்தைகள் லைலா, ஜெஸிமாவுக்காக அவளது உம்மும்மா செய்ததைப்போலவே பேகம் கதீஜாவும் வசதியானவர்கள் வீடுகளுக்குத் சென்று வேலைகள் செய்துபிழைத்து தன் வாழ்க்கையைத் தொடர்கிறாள் என்பதாக முடித்திருந்தாலே புதினம் நச்சென இன்னும் மொரமொரப்பாக நிறைவெய்தி இருந்திருக்கும்.

யுத்தகாண்டம் முடிந்து இராமன் இலங்காபுரியின் சக்கரவர்த்தியாக விபீஷணனுக்கும் முடிசூட்டிய பிறகு, இராவணன் ஏன் அவ்வாறு பிறன் மனைவியாகிய சீதை மீது ஏன் காமங்கொண்டான் என்பதை விவரித்து, கம்பன் மேலும் ஒரு காண்டத்தை

விரித்திருப்பாராயின் இராமாயணமே . நீர்த்துப் போயிருக்கும்.

நூலின் முகப்பிலான என்னுரையில் ஒரு நாவலுக்கு ஆழமான விவரிப்பு, பொருத்தமான முடிவெல்லாம் அவசியமான விடயங்கள் எனக் குறிப்பிடும் ஆசிரியர் எதற்காக நாவலை மேலும் வளர்த்துகிறார் என்பது புரியவில்லை.

ஸாஹிபுவும் அவன் உம்மாவும் பிரதிக்குள் ஏன் இப்படி வில்லத்தனமாக / எதிர்ப் பாத்திரங்களாக இயங்கினார்கள் என்பதை விவரிக்கும் (28, 29, 30) அத்தியாயங்கள் இப்பிரதியில் தேவையே இல்லை என்பது எண்ணம்.

அவ்வூரின் பள்ளிவாசலோ அதன் பரிபாலன உறுப்பினர்களோ, கதீஜா குடும்பம் நிர்க்கதிக்குள்ளாகி அல்லற்படுங் காலங்களில் அவர்களை நெருங்கிவந்து எதுவித உதவிகளையும் செய்வதில்லை. இருந்தும் பேகம் கதீஜா அவர்களின் மிரட்டுதலுக்கு ஏன் இப்படி மிரண்டு போகிறாரென்பது புரியவில்லை.

கதீஜாவின் இருபெண் குழந்தைகளில் மூத்தவள் லைலா, ஜெமீலாவை விடவும் விழிகளைக் கிறங்கடிக்கும் விதத்திலான அழகியாம். லைலாவின் மீது பள்ளிவாசல் கமிட்டித் தலைவர் மகனுக்கு ஒரு கண். அவனும் லைலாவை அடைவதற்குத் தந்திரங்கள் பண்ணிக் கொண்டிருக்கிறான். இப்படி இருக்கையில் அவன் ஒரு நாள் லைலாவின் அறை யிலிருந்து வெளியேறுவதைக் கண்டபின்னும், ``அடி உங்களுக்குள் ஏதும் தகாத உறவுகள் உண்டா..'' என்று கேட்பதற்குக் கதீஜா பேகம் தயங்குகிறாளாம். அவனும் தொடர்ந்து பேகம் கதீஜாவுக்குத் தெரியாமல் நைச்சியமாக லைலாவை வளைத்துப்போட்டுப் அவளைத் தன் சிசுவைச் சுமக்க வைத்துவிடுகிறான்.

எம்.எம். நௌஷாத்தின் 'சொரிக்காபுரிச் சங்கதிகள்' எனும் சிறுகதைத் தொகுப்பில் அவரது சின்னச்சின்ன வசனங்களாலான எளிமையும் அழகும் வாய்ந்த மொழிநடையைப் பார்த்து வியந்திருக்கிறேன். இந்நாவலிலிலும் அவரது இலாவகமான மொழிநடையின் அத்தனை அம்சங்களும் பரிமளிக்கின்றன. இப்போதெல்லாம் நாவல்களை அச்சேற்றும் அவசரத்தில் நாவலாசிரியர்கள் பிரதியை சீரமைப்பு செய்ய யாரிடத்தும் தருவதில்லை. எம்.எம். நௌஷாத்தும் இப்பிரதியை அச்சேற்றுமுன் செம்மை நோக்க எவரிடமாவது தந்திருந்தால். ஒரே சொல்லியத்தில் சில சொற்கள் இரண்டு தடவைகள் வருவதையும் பன்மை யிலமைந்த வசனங்களுக்கு ஒருமை வினைமுற்றுக்கள் வந்திருப்பதையும் தவிர்த்திருக்கலாம். இன்னும் பாத்திரங்களுக்கிடையேயான உரையாடல்கள் சில இயல்பான கிராமியப் பேச்சு வழக்கிலும் சில நம்பமுடியாதபடி இலக்கணத் தெளிவுடனும் அமைந்துள்ளன. ( எ+டு: பக்:78, பத்தி 1இல் கதீஜாவின் மாமியார் சொல்கிறார்: ``எனது குழந்தைகள் எல்லோரும் வீட்டிலதான் ஆரோக்கியமாகப் பிறந்தார்கள், வைத்தியசாலை எல்லாம் அவசியமில்லை.")

ஊரிலேயே மிகவும் வசதியானவரும் பணி ஓய்வுபெற்றவருமான தபாலதிபரின் வீட்டுவேலைக்கு கதீஜா போன இடத்தில் அவர் அவளைத் தடவிப் பார்க்கவிழைகிறார். பிறிதொரு சந்தர்ப்பத்தில் அவரே பின் பதுரினால் கொலையும் செய்யப்படுகின்றார். ஊர்ப் பள்ளிவாசல் மௌலவி ஹாஜியாரின் மகன் பின்நாளில் பரிபாலனசபையின் தலைவரானபின் அதன் உறுப்பினர்களின் பிரசன்னத்தில் கதீஜாவிடம்: ``நான் கூப்பிடும் போதெல்லாம் நீ வந்து என் வீட்டுச் சமையல்ப் பாத்திரங்களைக் கழுவித் தரவேண்டும், அதற்கு நான் ஒரு சல்லிக்காசும் தரமாட்டேன்" என்று ஆணையிடுவதும், பின்னர் அவர்கள் எல்லோரும் சென்று மறைந்தவுடன் கதீஜாவிடத்தில், ``நீங்கள் எனக்கு லைலாவைக் கட்டித்தர வேண்டும்" என்று இறைஞ்சி நிற்பதுவும் யதார்த்தங் குன்றிய நாடகீயக் காட்சிகளாக நகர்கின்றன.

பேகம் கதீஜா, ஹாஜியார் பற்றி லைலாவிடம் எடுத்துச்சொல்லி, அவனிடம் விழிப்பாகஇருக்கும்படி, அவன் பார்வையிலே படவே விடாமல் காபந்து பண்ணியிருக்கவேண்டும். மாறாக... லைலாவோ ஹாஜியாரின் மகனின் சிசுவை வயிற்றில் சுமப்பதுவும் ஹாஜியாரின் மனைவி அவர்களிடம் தந்திரமாக ஜாம் பறங்கித் தோட்டத்தைத் எழுதி வாங்கிக்கொண்டு, தன் மகனை கர்ப்பிணியான லைலாவை மணக்கச் சம்மதிப்பதுவும் பனுவலுடன் ஒன்றவியலாத காட்சிகளாகவுள்ளன.

இன்னும் இறுதி அத்தியாயங்களில் ஜெஸீமா திருமண வயதை எய்தும்போது (20 அகவைகள்) ஸாஹிபுக்கு 40 அகவைகளுக்கு அதிகமாக இருக்கவே சாத்தியம். பே கம் கதீஜா இறுதியில் எதற்காக ஜெஸீமாவை ஸாஹிபுவுக்கே முடித்து வைக்கிறாரென்பதும் புதிராகவும் அபத்தமான முடிவாகவுமுள்ளது.

இம் மிகை விவரிப்புகள், விடுபடல்கள், பாய்ச்சல்கள், நாடகீயக் காட்சிகள் நாவலின் அழகியலையோ கனத்தையோ அத்தனை பாதித்துவிடவில்லை. எம்.எம். நௌஷாத் அவர்கள் மேன் மேலும் பலதளங்களில் இன்னும் அழகியலுடன் கூடிய விரிந்த நாவல்களை எழுதித் தமிழில் தனக்கென ஒரு இடத்தை நிலைநிறுத்த வேண்டுமென வாழ்த்துகிறேன்.

பொ. கருணாகரமூர்த்தி
<karunah08@yahoo.com>

## 3

# மேன்ஷன்
# அல்லிகள் புகாத அர்ஜுன தர்பார்

**சந்தியா நடராஜன்**

திருவல்லிக்கேணி, எண்பதுகளில் வேலை தேடியும் வேலை கிடைத்தும் சென்னைக்கு வருகிற இளைஞர்களின் புகலிடமாக இருந்தது. வீதிகள் தோறும் 'மேன்ஷன்'கள்; வீட்டுச் சாப்பாடு விரும்புகிறவர்களுக்கு 'மெஸ்'கள். மேன்ஷன் என்றால் கல்யாணமாகாத வாலிபர்கள் உலகம்; என்றாலும், இங்கே தாடி வளர்த்தபடி தனி ஆளாக வாழும் விந்தை மனிதர்களுக்கும் இடம் உண்டு.

திருவல்லிக்கேணியை இரண்டு நீண்ட சாலைகள் குறுக்கும் நெடுக்குமாகப் பிரிக்கின்றன. ஒன்று மகாகவி பாரதியார் சாலையாக மாறிவிட்ட பைகிராப்ட்ஸ் சாலை. இன்னொன்று திருவல்லிக்கேணி நெடுஞ் சாலை. மெரினா கடற்கரையிலிருந்து தொடங்கி ராயப்பேட்டை மணிக்கூண்டு வரை ஒரே நேர்கோடாக நீளும் பைகிராப்ட்ஸ் சாலையில் உள்ள அமீர் மஹால் பகுதி 'ஜாம் பஜார்' என்று அழைக்கப்பட்டு வருகிறது. 'ஜாம் பஜார் ஜக்கு. நான் சைதாப்பேட்டை கொக்கு' என்று மனோரமா சொந்தக் குரலில் பாடிய பாட்டால் 1968 முதல் ஜாம் பஜார் தமிழ்நாடு முழுவதும் அறிமுகமானது. 'பொம்மலாட்டம்' படத்திற்கு வாலி எழுதிய பாடலின் முதல் வரிதான் 'ஜாம் பஜார் ஜக்கு'.

நான் சென்னைக்கு வந்து சேர்ந்தது 1985இல். மார்ச் 5ஆம் தேதி சென்னை சுங்க இல்லம் என்னை அதிகாரியாக வரவேற்கக் காத்திருந்தது. பள்ளித் தோழன் 'ஆவின்' நடராஜன் அப்போது ஜாம் பஜார் பகுதியில் ஒரு பெயரற்ற மேன்ஷனில் தங்கியிருந்தான். அவனது அறையைப் பகிர்ந்தபடி என் சென்னை வாழ்க்கை தொடங்கியது. அந்த மேன்ஷன் இருந்த தெரு முழுவதும் வாழைக்காய்த் தார்கள் குவிக்கப்பட்டிருக்கும். தூய்மை கொஞ்சம் தூரத்தில் இருக்கும். அறை என்பது இரண்டு கட்டில்களுக்கான இடம். குளியலறை பொதுவானது. என் உள்ளந்தொட்ட நண்பன் உடனிருந்ததால் வசதிக் குறைவுகள் பெரிதாக என்னை வருத்தவில்லை. ஆனால், காலையில் பல் துலக்கிய பத்து நிமிடத்தில் காபி அருந்திப் பழகியவனுக்கு நடந்து சென்று காத்திருந்து ரத்னா கபேயில் காபி குடிக்க வேண்டிய கட்டாயம், கிடைத்திருந்த சர்க்கார் வேலையின் இதத்தைக் குறைக்கவே செய்தது. மாயவரத்துக்காரர்கள் கொஞ்சம் சுகஜீவிகள்தான். ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.



பைகிராப்ட்ஸ் ரோடும் திருவல்லிக்கேணி நெடுஞ் சாலையும் சந்திக்கும் இடமே திருவல்லிக்கேணியின் மையம் என்று சொல்லலாம். இந்தச் சந்திப்பில் சாலையின் ஒரு புறம் ரத்னா கபே; மறுபுறம் ஹோட்டல் சீ லார்ட். ஒன்று சைவம்; மற்றது அசைவம். இந்தச் சந்திப்பிலிருந்து ராயப்பேட்டை நோக்கிச் சென்றால் இரண்டாவது தெருவில் இருந்தது எங்கள் மேன்ஷன். போகும் வழியில் சென்னை சைக்கிள் ரிக்ஷாகாரர்களின் மொழியும் நடைபாதை சண்டை சச்சரவுகளும் சென்னைக்கே உரிய வசவு சொற்களும் நம்மைக் கேட்காமலே பின்தொடரும். அவற்றில் கஸ்மாலம், சாவுகிராக்கி, பேமாணி, டகால்டி, டுபாக்கூர், மொள்ளமாரி, முடிச்சவிக்கி, பிக்காளி, பிசுனாறி, கேப்மாரி, ஈத்தரை, நாதாரி, பஜாரி போன்ற சொற்கள் சென்னையின் சாதாரணக் குடிமக்களின் நாகரீகமான

வசவு சொற்களாக இன்றுவரை பயன்பட்டு வருகின்றன. 'தேவடியா புள்ள' என்ற வசைச்சொல், முற்றிய தகராறில் மூர்க்கம் தொனிக்க உச்சாடனம் செய்யும் சென்னை சொற்றொடர் என்பது புரிய, கொஞ்சம் நாளாயிற்று. தெருச் சண்டைகளில் தங்களைச் சென்னையின் பூர்வ குடிகளாக, பேட்டை ரவுடிகளாக அல்லது வஸ்தாதுகளாக நிலை நிறுத்திக் கொண்டவர்கள் எதிரியை அச்சுறுத்தவும் அவமானப்படுத்தவும், "..த்தா, ஒம்மாள" போன்ற சொற்களைத் தக்க உடல்மொழியுடன் பயன்படுத்தினார்கள். அலுவலகத்திலும் எனது சக அதிகாரிகளில் சிலர் இச்சொற்களை சர்வ சாதாரணமாகப் பயன்படுத்துவார்கள். அவை அவர்களுக்கு இழிசொற்களாகப் படவில்லை. அவற்றை, பேசும்போது பயன்படுத்தும் இணைப்புச் சொற்களாகவே கருதினார்கள்.

கருணாகரன் என்ற பெயரில் இருவர் என்னுடன் பணிபுரிந்து வந்தனர். ஒருவர் ராயபுரத்துக்காரர். நெற்றியில் விபூதி இடுவதுபோலக் குங்குமம் தீட்டிக்கொண்டு பணிக்கு வருவார்; பழக இனியவர்; கால்பந்து வீரர். 'ஒத்தா' என்ற சொல்லை ஒரு நிமிட நேரம்கூட அவரால் உச்சரிக்காமல் இருக்க முடியாது. இந்தப் பிரச்சனையால் உயரதிகாரிகளிடம் ஆங்கிலத்தில் மட்டுமே பேசுவார். அவரை அலுவலகம் 'ஒத்தா கருணகரன்' என்றே அன்போடு அழைத்து வந்தது. இரண்டு கருணாகரன்களையும் வேறுபடுத்திக்காட்ட இந்தச் சொல் எல்லோருக்கும் பயன்பட்டது. அநேகமாக எல்லோர் வாயிலும் புகுந்து புறப்பட்ட இச்சொல்லைத் தற்காலத் தமிழ் அகராதிகள் ஒரு நாளும் தவிர்க்க முடியாது.

திருவல்லிக்கேணியின் பிரதான சாலைகள் மிக நீளமானவை. ஜாம்பஜார் பகுதியிலிருந்து தொடங்கும் எல்லீஸ் ரோடு அண்ணா சாலையில் போய் முட்டும். இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கு நடந்து சென்றால் அரை மணி நேரம் ஆகலாம். எல்லீஸ் ரோட்டில் சில அல்வாக் கடைகள் இருந்தன. அவற்றில் மஞ்சள், பச்சை, கருப்பு வண்ணங்களில் கூட அல்வா வகைகள் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. அப்போது கோதுமை அல்வாவும் காசி அல்வாவும் மட்டுமே எனக்கு பரிச்சயமாகி இருந்தன. பெரும்பாலும் இந்தக் கடைகளில் இஸ்லாமியர்கள்தான் இருப்பார்கள். ஒருகால் இவை உருது முஸ்லிம்களிடமிருந்து பெறப்பட்ட உணவு வகைகளாக இருந்திருக்கலாம்.

திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையில் முஸ்லீம் மேல்நிலைப்பள்ளிக்கு எதிரே சுப்ரபாத் என்று ஒரு ஹோட்டல் இருந்தது. அங்கு அதிகாலை தொட்டே சேமியா பாயசம் கிடைக்கும். கண்ணாடிக் குவளை யிலிருந்து அலுமினியக் கரண்டி மூலம் பாயசத்தைப் பருகுகிறவர்கள் எனக்கு அந்நியர்களாகவே தெரிந்தார்கள். 'சுப்ரபாத்' ஆனந்த பவனாக மாறி, இப்போது 'பார்த்தாஸ்' ஆக உருமாறிவிட்டது. பாயசம் மரித்துப்போய் காளான் சூப்பும் நூடுல்ஸும் ஃப்ரைடு ரைசும் நம்மை வரவேற்கின்றன. ரத்னா கபே மட்டும் சாம்பாரில் இட்லியை மிதக்கவிட்டு நம்மை அதில் நீச்சலடிக்கச் சொல்கிறது. 1948இல் தொடங்கிய ரத்னா கபேயின் பாரம்பரியம் தொடர்பறாமல் அடுத்த தலைமுறைக்கும் தலை நீட்டிக்கொண்டிருக்கிறது.

பார்த்தசாரதி கோயிலுக்கருகில் பஞ்சகச்சத்துடன் மேல்துண்டுடன் காய்கறி வாங்க வந்தவர்கள், ஷார்ட்ஸ் - டீஷர்ட் அணிந்து அமெரிக்காவில் இருக்கும் பிள்ளைகளோடு பேசிக்கொண்டு போகிறார்கள். இணைய காலம் எல்லாவற்றையும் இடம்பெயரச் செய்திருக்கிறது. எல்லோரும் இடம் பெயர்ந்திருக்கிறார்கள். உணவும் உடையும் மட்டும் கல்லுப் பிள்ளையாரா என்ன, உருமாறாமல், இடம் மாறாமல் இருக்க? பட்டுப்புடவை மட்டுமே கட்டிக்கொண்டு பார்த்தசாரதி கோயிலுக்கு வரும் பரம்பரை இப்போது சுடிதார் / பைஜாமாவுக்கு மாறிவிட்டது. உடைமாறிவிட்டவர்கள் பெற்றெடுத்த செல்வங்கள் துப்பட்டாவையும் சுமையெனக் கருதித் துறந்துவிட்டார்கள். இப்படி உடை மாறி விட்ட பெண்களை அனுமதிக்கும் அசோக்நகர் ஆஞ்சனேயர் கோயிலில் ஆண்கள் ஷார்ட்ஸ் அணிந்துவர அனுமதியில்லை. கலியுகத்தில் ஆண்களுக்குக் கிரகநிலை சரியில்லை என்பதைக் கட்டம்போட்டு ஜோஸ்யம் பார்த்துச் சொல்லத் தேவையில்லை. கண்டால் போதும்! காதுகள் கேட்டால் போதும்! பார்த்தசாரதி கோயிலுக்குப் பக்கத்தில் குடியிருந்த பாரதிகூட பாஞ்சாலி சபதத்தில் இப்படி, 'கிழக்கு மேற்காகும்' என்று தீர்க்கதரிசனமாக எழுதியிருக்கிறான். கிழக்கு மேற்காகிக் கொண்டிருக்கிறது.

1980களின் பிற்பாதியில் திருவல்லிக்கேணியில் திரும்பிய இடமெல்லாம் 'சுரண்டல் லாட்டரி' கடைகள் அமோகமாகச் செயல்பட்டுவந்தன. லாட்டரி சீட்டில் அச்சிடப்பட்டிருக்கும் எண்ணை வெள்ளி நிற பூச்சு மறைத்திருக்கும். அந்த பூச்சை நகத்தால் சுரண்ட வெளிப்படும் எண் உங்கள் அதிர்ஷ்டம் அல்லது துரதிருஷ்டத்தைச் சுட்டிக் காட்டும். பேருந்து நிறுத்தத்தில் பெண்கள்கூட 'சுரண்டல்' விற்பனையில் ஈடுபட்டிருந்தனர். 'சுரண்டலை" ஒழிக்க வாய் கிழியப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால், அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருந்தது சுரண்டல் லாட்டரி.

ஒருநாள் இரவுப் பணி முடித்துவிட்டு அதிகாலை அறைக்கு வந்து தங்கிவிட்டேன். மறுநாள் சுமார் பதினொரு மணிக்குத்தான் கண் விழித்தேன். பல் துலக்கிவிட்டு வெளியே வந்தால் மேன்ஷன் மயான அமைதியாயிருந்தது. பர்ஸில் பத்து பதினைந்து ரூபாய்தான் இருந்தது. ஒரு காபி குடித்துவிட்டு யோசித்தேன். மாலை நண்பர்கள் திரும்பும்வரை எஞ்சிய பணத்தில்தான் வயிற்றுக்கு ஈய வேண்டும். அன்று வங்கிக்கும் ஏதோ விடுமுறை நாள். சுப்ரபாத் ஹோட்டலுக்கு எதிரே இருந்த லாட்டரி கடையில்




பத்து ரூபாய்க்கு சீட்டு வாங்கிச் சுரண்டினேன். இருபது ரூபாய் கிடைத்தது. கொஞ்சம் தள்ளிச் சென்று இன்னொரு கடையில் ஐந்து ரூபாய்க்குச் சுரண்டல் வாங்கிக் கொஞ்சம் ஏமாந்தேன். பிறகு, கொஞ்ச தூரம் நடப்பது, கண்ணில் படுகிற லாட்டரி கடையில் சுரண்டுவது என்று நம்பிக்கையோடு நகர்ந்து கொண்டிருந்தேன். அரை மணி நேரத்தில் ஏறக்குறைய அறுபது ரூபாய் என் கைவசமாயிற்று. அன்றைய பொழுதின் பசி தீர்த்து ஸ்டார் தியேட்டரில் ஓடிக்கொண்டிருந்த ஓர் இந்திப் படத்திற்குப் போய் நீண்ட நெடிதுயில் கொண்டு நிம்மதியாக அறைக்குத் திரும்பினேன். சுரண்டல் என்னை மட்டும் சுரண்டவில்லை.

1986ஆம் ஆண்டின் பிற்பகுதியில் எனது அறை நண்பர் திருமணம் செய்துகொண்டு மேன்ஷன் வாழ்க்கையிலிருந்து விடுபட்டுச் சென்றார். ஆனால், நான் தனித்திருக்கவில்லை. முருகேச நாயக்கர் மேன்ஷனில் இருந்த மாயவரத்து நண்பர்கள் என்னை வரவேற்றனர். திருவல்லிக்கேணி இந்து மேல்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வந்த முத்துகிருஷ்ணன் அறைக்கு ஒரே நாளில் ஒரே சூட்கேசுடன் இடம் பெயர்ந்தேன். எனக்கு கெஸ்ட் அந்தஸ்து கொடுக்கப்பட்டது.

அங்கு நான் தங்கியிருப்பது சில நாட்களுக்குப் பிறகுதான் மேன்ஷனை நிர்வகித்து வந்த பாஸ்கரனுக்குத் தெரிய வந்தது. முத்து சென்று பேசி சிக்கலைத் தீர்த்தான். முத்துவுடன் துக்க வீட்டுக்குப் போனாலும் சிரிக்காமல் இருக்க முடியாது. பாஸ்கரன் என்ன செய்வார்? கெஸ்ட் சார்ஜ் மாதம் ஒன்றுக்கு 60 ரூபாய். எனக்கோ அப்போது சென்னை விமான நிலையத்தில் 'கஸ்டம்ஸ் இன்டெலிஜென்ஸ்' பிரிவில் பணி. ஐந்து பேர் கொண்ட ஒரே குழுவாக இரவும் பகலும் வேலை பார்த்துக் கொண்டிருந்தோம். நானே இளையவன். அதனால் கூடுதல் சுமை. என்னைப் பொறுத்தவரை தூங்குவதற்கு மட்டுமே மேன்ஷன் என்றாகியிருந்தது. அதனால் பாஸ்கரன் என்னைப் பார்ப்பதற்கோ, அவரை நான் பார்ப்பதற்கோ வாய்ப்புகள் குறைவு. அந்த மேன்ஷனை விட்டு அகலும்வரை நான் கெஸ்டாகவே இருந்தேன்.

ஓர் அறைக்கு ஒருவர்தான் கெஸ்ட் என்ற கட்டுப்பாடுகள் எதுவும் நடைமுறையில் இருந்ததில்லை. ஏறக்குறைய 150 அறைகள் இருந்த எம்.என் மேன்ஷனில் கட்டில்களின் எண்ணிக்கை சுமார் 300-350 இருக்கலாம். ஒரு நேரத்தில் அறைகளில் தங்கியிருப்போர் எண்ணிக்கை இரு மடங்காக இருக்கும். பரோபகாரி 'ஆந்திரா பேங்க் பாலு' போன்றவர்கள் இந்த எண்ணிக்கையை உயர்த்துவதில் பெரும் பங்கு வகித்தனர்.

ஒரு நாள் அதிகாலை யாரோ ஒருவர் பாலுவைச் சந்திக்க வந்திருந்தார். அவருக்குச் சென்னையில் ஏதோ வேலை. அவரின் நண்பர், பாலுவின் அறையில் இடம் தரும்படி ஒரு சிபாரிசு கடிதம் கொடுத்திருந்தார். கடிதத்தை வாங்கிப் படித்து முடித்தவுடன் வந்தவரைக் காபி குடிக்க அழைத்துச் சென்றார் பாலு. பிறகு 'வந்தவர்' சாவி கொடுத்த பொம்மை போல பாலு இயக்கியபடி குளித்தார்; உடை அணிந்து வந்து வேலைக்குத் தயாரானார். பாலு 'வந்தவ'ரை அழைத்துச் சென்று காலை உணவு வாங்கித் தந்தார். 'இரவு பார்க்கலாம்' என்று 'வந்தவ'ரிடம் சொல்லிவிட்டு ஆந்திரா வங்கிக்குப் புறப்பட்டுச்

சென்றார். 'வந்தவர்' அதிகம் எதுவும் பேசவில்லை. வங்கிப் பணி முடிந்து இருட்டிய பிறகுதான் பாலு அறைக்குத் திரும்பினார். தனது வேலையாக வெளியே சென்றிருந்த எங்கிருந்தோ 'வந்தவரும்' அவர் வேலையை முடித்துக்கொண்டு வந்தார். இருவரும் இரவு உணவுக்கு வெளியே சென்று வந்தார்கள். அறையிலிருந்த மற்ற நண்பர்களுக்கு 'வந்தவர்' பற்றி எதுவும் தெரியாது. உறங்கப் போவதற்கு முன் 'வந்தவரை' பாலு மென்மையாக அழைத்தார். அப்போதுதான் அவரைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினார். 'தம்பி, தவறா எடுத்துக்காதீங்க...இந்த சிபாரிசு கடிதம் கொடுத்தவர் யாருன்னு எனக்குத் தெரியல. என் அறையில தங்கியிருந்ததா எழுதியிருக்காரு. ஆனா, எனக்கு ஞாபகம் வரல' என்ற ரீதியில் பாலு தணிந்த குரலில் பேசினார். 'வந்தவர்' இப்போது தயக்கமில்லாமல் பதில் சொன்னார்: 'அது சார், கடிதம் கொடுத்திருக்கார்ல அவரு உங்க கெஸ்டா ஒரு நாள் இங்க தங்கியிருந்தாராம். அவருக்கு அவர் நண்பர் கடிதம் கொடுத்தனுப்பியிருந்தாராம். அதனால உங்களுக்கு அவர் ஞாபகம் வரல போல'. இந்த உரையாடலுக்குப் பிறகு இருவரும் உறங்கிவிட்டார்கள். அநேகமாக 'வந்தவர்' கூடப் பின்னொரு நாள் அவருக்குத் தெரிந்தவருக்கு உதவுமாறு பாலுவுக்குப் பரிந்துரைக் கடிதம் எழுதியிருக்கலாம்.

பாலு என்கிற பாலசுப்பிரமணியன் எனக்குக் கல்லூரியில் இரண்டாண்டு சீனியர். 'ஆயிரம் நிலவே வா' பாடலை லயித்துப் பாடுவார். எனக்கு முன்பாகவே சென்னைக்கு வந்து தலைமைச் செயலகத்தில் அலுவலராகி, பிறகு ஆந்திரா வங்கிப் பணியில் சேர்ந்தார். நாடகங்களில் நடிப்பார். திரைப்பட ரசிகராக, செயல்பாட்டாளராகப் பல அமைப்புகளில் தீவிரமாக ஈடுபட்டு வந்தார். அவரது அறையில் ஈழத் தமிழ்ப் போராளி பிரபாகரனின் படமும் திரைப்பட இயக்குநர் - நடிகர் டி.ராஜேந்தர் படமும் இசையரசி எம்.எஸ் படமும் அடுத்தடுத்து இடம் பெற்றிருக்கும்.

பாலு கொஞ்சம் கூச்சசுபாவமும் தாழ்வுணர்ச்சியும் கொண்டிருந்தார். திருமணம் செய்துகொள்ளத் தயக்கம் காட்டி வந்த பாலு, தாமதமாகவே திருமணம் செய்துகொண்டார். இலங்கை எழுத்தாளர் செ.யோகநாதன் சென்னையில் வாழ்ந்தபோது பாலுவின் தோழமையில் மகிழ்ந்திருந்தார். அடிக்கடி செ.யோவை பாலுவின் அறையில் பார்த்திருக்கிறேன். அவரது இடர் களையும் தோழராய்ச் செயல்பட்டு வந்தார் பாலு. எழுத்தாளர் பாவண்ணனும் பாலுவைக் கண்டாலே பரவசமடைவார். பாவண்ணன் சென்னையில் பணியாற்றிய இரண்டாண்டு காலத்தில் மாதம் ஒருமுறையாவது பாலுவைச் சென்று பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். எம்.ஜி.ஆர் நினைவு நாளில் மேன்ஷன் கேண்டீனில் ஏழைகளுக்கு இலவச உணவுப் பொட்டலம் ஏற்பாடு செய்வதும் கண்ட புத்தகங்களையெல்லாம் கண்டமேனிக்கு வாங்கிக் குவிப்பதும் பாலுவின் வழக்கம். இப்படியிருந்த பாலு உடல் நசிவு ஏற்பட்டு உள்ளம் நிலைகுலைந்தார். எவரையும் குறை சொல்லி அறியாத பாலு நெருங்கிய நண்பர்கள் மீது குறைகூற ஆரம்பித்தார். வீடு முழுக்க பழைய புத்தகங்கள்; அவர் மனசு முழுக்க ஏதேதோ கவலைகள்; அச்சங்கள்; மனமுறிவின் வெடிப்புகள்; குழப்பங்கள். எல்லாவற்றுக்கும் முற்றுப்புள்ளி வைத்தது அந்தச் செய்தி; 2019இல் பாலு தற்கொலை செய்துகொண்டார்.


பாலு

இடதுசாரி சிந்தனையாளரான கோ.கேசவன், கவிஞர் இன்குலாப்பைச் சந்திக்க வரும்போதெல்லாம் தவறாமல் பாலு அறைக்கும் வந்து போவார். அருண்மொழி, அம்ஷன் குமார் போன்ற திரையுலகக் கலைஞர்களும் பாலுவின் நெருங்கிய சகாக்கள். கிரா அவர்களின் கிடை குறுநாவலைத் தழுவி அம்ஷன் குமார் எடுத்த 'ஒருத்தி' படத்தில் பள்ளி ஆசிரியராக நடித்திருக்கிறார், பாலு. அருண்மொழி தயாரித்த ஆவணப்படங்களில் பாலுவின் பங்களிப்பு பெரிது.

முருகேச நாயக்கர் மேன்ஷனில் கண்ணப்ப நாயக்கர் என்று ஒருவர் இருந்தார். அந்த மேன்ஷனின் அறிவிக்கப்படாத சட்ட ஒழுங்கு அதிகாரி அவர்தான். இரவு நேரங்களில் எந்த அறையிலாவது கலாட்டா நடந்தால் இவர் தானாகவே முன்வந்து ஆஜராகி அக்கப்போர் ஆசாமிகளை அடக்கி ஒடுக்கி



ரத்னா கஃபே

விடுவார். கண்ணப்பன் கும்பகோணத்துக்காரர். இந்த மேன்ஷனின் மூத்த வாடிக்கையாளர் இவரே. 1970இல் குடியேறிய இவர் குறைந்த பட்சம் கால் நூற்றாண்டு காலம் எஃப் பிளாக் கண்ணப்பனாக வாழ்ந்தார். மத்திய அரசின் சென்சஸ் துறையில் வேலை செய்து வந்தார். அவர் அத்துறையில் வேலை பெறக் காரணமாக இருந்தவர் சொக்கலிங்கம். பேரறிஞர் அண்ணா முதல்வராக இருந்தபோது அவரது செயலாளராக இருந்தவர் சொக்கலிங்கம் என்ற ஐஏஎஸ் அதிகாரி. மாயவரத்துக்குப் பக்கத்தில் உள்ள மங்கை நல்லூர்தான் அவரது சொந்த ஊர். அண்ணாவின் மறைவுக்குப் பிறகு Board of Revenue என்ற துறைக்கு மாற்றப்பட்டார். பிறகு மத்திய அரசில் அவருக்கு இருந்த செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு மத்திய அரசின் அதிகாரியாக சென்சஸ் துறைக்கு மாற்றம் பெற்றார். அவரது உதவியாலேயே கண்ணப்பன் சென்சஸ் துறையில் சேர்ந்தார். ஐஏஎஸ் அதிகாரி பிச்சாண்டி எம்.என் மேன்ஷனில் குடியிருந்தவர் என்பார் கண்ணப்பன். தமிழக அரசின் செயலாளராக இருந்த முத்துசாமிக்கும் இந்த மேன்ஷனுடன் தொடர்புண்டு என்று சொல்வார். ஒரு கொலைகாரன்கூட இங்கே கெஸ்டாக, தலைமறைவாக வாழ்ந்து வந்தானாம். ஒரு நாள் போலீசார் அவனைக் கைது செய்து அழைத்துச் சென்றிருக்கிறார்கள். நான் மேன்ஷன்வாசியாக இருந்தபோது நடிகர் சார்லியும் அங்கே தங்கியிருந்தார். திராவிட இயக்கத்தைச் சேர்ந்த ஆணைமுத்துவின் தலைமையில் எம்.என் மேன்ஷன் மொட்டை மாடியில் ஒரு கூட்ட,ம் நடந்ததாகவும் அக்கூட்டத்திற்கு எவ்விதக் குந்தகமும் ஏற்படாமல் தான் செயல்பட்டதாகவும் கண்ணப்பன் சொன்னார்.

மேன்ஷன் உலகத்தில் பெண்களுக்கு இடமே இல்லை என்று சொல்வது தவறு. மேன்ஷன் என்பது பெண் வாசனையே வீசாத பிரதேசம். அது ஆண்காளால் ஆனது. ஆண்களுக்காக ஆனது. மேன்ஷன் வாசிகளைப் பார்த்துவிட்டுப் போகக் கூட ஒரு பெண் வருவதற்கு அனுமதி இல்லை. அப்படியிருந்தும் ஓர் இரவில் ஒரு பெண் கையில் ஒரு சூட்கேசுடன் வந்துவிட்டார்.

அந்தப் பெண் கல்கத்தாவில் பிறந்து வளர்ந்த, சென்னையில் வாழும் தமிழ்க் கிறித்துவப் பெண். பாரிஸ் கார்னர் பகுதியில் ஒரு ஷிப்பிங் கம்பெனியில் வேலை செய்து வந்தவர். அவருக்கும் அதே பகுதியில் ஒரு லாரி டிரான்ஸ்போர்ட் அலுவலகத்தில் வேலை பார்த்து வந்த தெற்கத்தி நபரான மணிக்கும் பழக்கம் ஏற்பட்டு, இருவரும் திருமணம் செய்துகொள்ள முடிவு செய்திருந்தனர். மணி என் மீது அளவு கடந்த பிரியம் வைத்திருந்த பக்கத்து அறைவாசி. அவர் கிறித்துவப் பெண்ணின் பெயரைத் தமிழ்ப் பெயரக மாற்றி அதற்குரிய ஆணையை அந்த அலுவலகத்தில் நேரே சென்று வாங்கி வந்துவிட்டார்.

அவர் செய்த தவறு, அந்தப் பெயர் மாற்றப்பட்ட அரசு ஆணையின் பிரதியை அந்தப் பெண்ணின் முகவரிக்கு அனுப்பி விடாதீர்கள் என்று உரிய அலுவலரிடம் சொல்லி, தக்க ஏற்பாடு செய்யாது விட்டதுதான். பெயர் மாற்றப்பட்ட அறிவிப்பு அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது. அவருடைய தாய்க்கு விஷயம் எளிதில் புரிந்துவிட்டது. வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பிய மகளை, தாய் வீட்டை விட்டு விரட்டிவிட்டார். வேறு வழியற்ற அந்தப் பெண் நாயக்கர் மேன்ஷனுக்கு வந்துவிட்டார். பிறகு மணி, தற்காலிகமாக அந்தப் பெண்ணுக்குத் தெரிந்த குடும்ப நண்பர் வீட்டில் தங்க வைத்து, பதிவுத் திருமணமும் செய்துகொண்டார். மேன்ஷன் வளாகத்தில், அதன் வரலாற்றில் நாங்கள் பார்த்த ஒரே பெண், மணியின் மனைவிதான். காலப் போக்கில் நானும் இடம் மாறி இடம் மாறி அசோக் நகருக்கு வந்துவிட்டேன். மணியைச் சந்திக்கவும் இல்லை. மூன்று ஆண்டுகள் கடந்திருக்கும். ஒரு நாள் பாரிஸில் இரண்டாவது கடற்கரை சாலையில் உள்ள நட்ராஜ் ஹோட்டலுக்கு மதிய உணவு சாப்பிடச் சென்றிருந்தேன். எதிரே மணி ஆவேசமாக நடந்து வந்துகொண்டிருந்தார். பத்தடி பின்னால் மணியின் மனைவி வித்யா தொடர்ந்து வந்தார். இருவர் முகத்திலும் இறுக்கமும் பதற்றமும் படிந்திருந்தது. மணி, என்னைப் பார்த்தவுடன் ஓடி வந்து என் கைகளைப் பற்றிக்கொண்டார். படபடவென்று பேசினார். "தலைவரே, எங்க ரெண்டு பேருக்கும் மனக்கசப்பு உண்டாகிப் பல மாதமாகிருச்சு. பிரியுறதா முடிவு செஞ்சுட்டோம். இதான் எங்க கடைசி சந்திப்பு. வக்கீலைப் பார்க்கப் போறோம்."

இருவருடனும் சேர்ந்து சாப்பிட்டேன். உணவு உள்ளே இறங்க மறுத்தது. பேருக்குச் சாப்பிட்டோம். பிறகு வித்யாவுடன் கொஞ்ச நேரம் தனியாகப் பேசினேன். வீட்டில் பிரைவசி இல்லை என்பதுதான் வித்யாவின் பிரச்சனை. மணியின் தாயாரும் தம்பியும் மணியின் கூடவே இருந்தனர். மணியின் தாயார் மறவர் பூமியிலிருந்து வந்தவர். மருமகள் கலாசாரத்துடன் ஒத்துப்போக முடியவில்லை. தம்பியின் இருப்பு கணவன் மனைவியின் தனிப்பட்ட வாழ்க்கைக்கு இடைஞ்சல். வேறு எந்த விதத்திலும் மண வாழ்கையில் இருவருக்கும் குறைவு இல்லை. வித்யாவிடமிருந்து கேட்டறிந்த செய்திகளின் அடிப்படையில் மணிக்கு ஒரு யோசனை கூறினேன். தம்பியிடம் பிரச்சனையை எடுத்துக்கூறி முதலில் அவரை ஒரு லாட்ஜில் தங்க வைக்கலாம் என்றேன். எனது யோசனைக்கு இருவரும் உடன்பட்டனர். விவாகரத்துக்காக வந்தவர்களின் விவகாரம் முடிந்து வீடு திரும்பினர். அந்த நாள் இரவைக் கொண்டாடி மகிழ்ந்தேன்.

ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு சென்னை ஒரு கலப்பு கலாசாரத்தின் இயங்குதளமாக மாறிவிட்டது. அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் படிக்கவும் பணம் சம்பாதிக்கவும் செல்லும் இளைய சமூகம் வெள்ளைக்கார இணையரோடு வந்திறங்குகிறார்கள். வட இந்தியர்கள் தென்னிந்தியப் பெண்களை மணம் முடித்துக் கொள்கிறார்கள். வெள்ளைத்தோல் கருப்புத்தோல் வித்தியாசங்கள் மறையத் தொடங்கிவிட்டன. ஆங்காங்கே சாதியக் கொடுமைகள் நிகழ்ந்தாலும் பல்வேறு சாதியினர் கைகுலுக்கி ஒன்றாவதையும் இப்போதெல்லாம் அதிகமாகக் காண முடிகிறது. எல்லாவற்றுக்கும் பொருளாதாரமே அடிப்படை.. பில்கேட்ஸ் வாழ்க.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

கவிதை

# தடயமற்றுப் போன திரி

## மதுரை சத்யா



எண்ணெய்தீர்ந்துப்போன
நிராதரவான பிரகாரத் தீபமொன்று
தன்னைத் தானே
அணைத்துக்கொள்ள முடியாதபடி
காற்றும் கைவிட

மொத்தத் திரியும்கொழுந்தெரிந்து
கருகுவதைக் கண்டு கையறுநிலையில்
கடவுளும் கண்மூடிக்கொள்ள
கருகிய வாடை வழியே
ஒளி தாங்கிய
தடயம் ஏதுமற்றுக் காற்றில் கரைந்தது
அப்பாவப்பட்ட திரி

மதுரை சத்யா
<sathyasurrey@gmail.com>

# படமும் பாடமும்

## இந்திரா பார்த்தசாரதி

அது சின்ன தோப்புதான். பார்ப்பதற்கு ரம்மியமாக இருந்தது. நாகலிங்கம், பள்ளிக்கூடம் முடிந்தவுடன் அங்குப் போய் நண்பர்களுடன் விளையாடுவது வழக்கம்.

அன்று அவன் அங்குப் போனபோது யாரும் வந்திருக்கவில்லை.

தோப்புக்கு அருகே ஒரு சின்ன குளம். அங்கு ஆண்டு முழுவதும் தண்ணீர் இருந்தது என்பதுதான் ஆச்சர்யம். நாகலிங்கம், கால்களை கழுவிக்கொள்ள அந்தக் குளத்தருகே சென்றான்.

அவன் திடுக்கிட்டு நின்றான்.

ஒரு நல்ல பாம்பு படம் பிடித்து ஆடாமல் அசையாமல் குளத்தருகே நின்றது. பாம்பைக் கண்ட பயத்தைக் காட்டிலும், அதன் படத்தில் ஏதோ எழுதப்பட்டிருந்தது என்பதினால் ஏற்பட்ட வியப்புதான் அதிகமாக அவன் முகத்தில் தெரிந்தது. அது தேவநாகிரி எழுத்து என்று அவனுக்குப் பட்டது, என்னவென்றுதான் அவனுக்குப் புரியவில்லை.

பாம்பைப் பார்த்தால் ஓடக்கூடாது என்று அவன் அம்மா அவனுக்குச் சொல்லியிருக்கிறார். அது அவனுக்குத் தெரியும்.

அவனும் ஆடாமல் அசையாமல் நின்றான்.

பாம்பு சிறிது நேரம் கழித்து ‘சர’ ‘சர’வென்று ஓடி மறைந்தது.

அடுத்த நாள் அவன் தன்னுடைய பள்ளிக்கூட ஆசிரியரை அழைத்துக்கொண்டு வந்தான். அவன் சொன்னதை அவர் முதலில் நம்பவில்லை. பிறகு அதை நேரில் பார்த்து விடுவதென்று முடிவு செய்து அவனுடன் வந்தார்.

பாம்பு அவர்களை ஏமாற்றவில்லை. அதே நேரத்தில், அதே இடத்தில் படம் பிடித்து நின்றது. ஆசிரியருக்கு தேவநாகிரி லிபி படிக்கத் தெரியும்.



படித்தார். ‘ராம்’ என்றிருந்தது.

அயோத்தியில் இருக்கவேண்டிய பாம்பு மதுரைப் பக்கத்தில் இந்தச் சிற்றூருக்கு எப்படி வந்தது என்று அவருக்குப் புரியவில்லை. ஒரு வேளை, ராமன் ராமேஸ்வரம் போகும் போது, இந்த ஊருக்கு வந்து இந்தக் குளத்தில் குளித்திருக்கலாம். அதனால்தான், இந்தக் குளத்தில் நீர் வற்றுவதேயில்லை! இன்னொரு சாத்தியமும் இருக்கிறது. இப்பொழுது தோப்பாக இருக்கும் இவ்விடத்தில் ஒரு கோயில் இருந்திருக்கக் கூடும். இந்தக் குளம் ஏன் ஒரு புஷ்கர்ணியாக இருந்திருக்க கூடாது?

ராமனை எப்பொழுதும் பிரியாமலிருந்தவன் லக்ஷ்மணன். அவன் ஆதிசேஷன் அவதாரம். இந்தப் பாம்புதான் லக்ஷ்மணனோ? ஏன் தேவநாகிரி லிபியில் ‘ராம்’ என்று எழுதப்பட்டிருக்கிறது என்பது இப்பொழுது புரிகிறது.

இது தேசிய முக்கியத்துவம் வாய்ந்த செய்தி. தெய்வ நம்பிக்கையும் ‘தேசபக்தியுமு’டைய ஒரு தேசியக் கட்சித் தலைவர்களிடம் இந்தத் தகவலைச் சொன்னால் இதை எப்படி நாட்டு நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்வதென்று அவர்களுக்குத் தெரியும். ஆனால், அவர்கள் இதை நம்ப வேண்டுமே! நாளைக்கு ‘மொபைலில்’ படம் பிடித்து, தில்லிக்குப் போய் அவர்களிடம் காட்டலாம்.

“நாகு... இதைப் பத்தி யாருக்கும் சொல்லாதே. நாம நாளைக்கு டெல்லிக்குப் போவோம். இது ரொம்ப முக்கியமான சமாச்சாரம். உன்னோட அப்பாகிட்டே சொல்லி உன்னை நான் கூட்டிண்டு போறேன்” என்றார் ஆசிரியர் நாகலிங்கத்திடம்.

அடுத்த நாள், அதே சமயத்தில், பாம்பு படம் எடுத்தது. அவர் படம் எடுக்கக் காத்திருப்பதுபோல் ஆடாமல் அசையாமல் நின்றது. அவர் படம் எடுத்தார்.

தாமும் அக்கட்சித் தலைவர்களில் ஒருவராக ஆகும் வாய்ப்பு நெருங்கிக் கொண்டிருக்கின்றது என்ற மகிழ்ச்சியில் அவர் மனம் நிறைந்திருந்தது. அவருடைய மூன்றாவது பெண் சுதாவின் திருமணத்தை 'ஜாம்' ஜாம்' என்று நடத்திவிடலாம்.

தில்லியில் அவர் அக்கட்சித் தலைவர்களைச் சந்தித்தார். புகைப் படத்தைக் காண்பித்தார். இராமன் அந்த ஊர்க் கோயில் புஷ்கர்ணியில் நீராடியது பற்றிய ஓர் ஸ்தல புராணத்தை அவரே உருவாக்கி அது கர்ணப் பரம்பரைச் செய்தி என்றும் கூறினார்.

'ராநாமத்தை'த் தன் படத்தில் தாங்கிய பாம்பு தேசியப் புகழ்பெற்றது. ஆசிரியர் எடுத்த படம் எல்லா தேசியத் தொலைக் காட்சி 'சானல்'களிலும் பத்திரிகைகளிலும் பிரபலமாகியது.

ஒரு குறிப்பிட்ட நாளில் இந்தக் காட்சியைக் காண, தேசிய, சர்வ தேசிய பத்திரிகைக்காரர்களும் புகைப்படக்காரர்களும் அச்சிற்றூரை முற்றுகை இட்டனர்.

நாகலிங்கத்தின் படிப்புச் செலவு முழுவதையும் தாம் ஏற்றுக்கொள்வதாக பாரதப் பிரதமர் அறி வித்தார். ராம நாமம் தாங்கிய இப்புனித பாம்பின் தரிசனம் அவனுக்கன்றோ முதலில் கிட்டிற்று! அவன் பெயரும் நாக லிங்கம்! என்ன பொருத்தம்!

இங்கு ராமனுக்கு ஒரு கோயில் கட்ட வேண்டும்! தமிழ்நாட்டில் அவர் கட்சி பிரமாதாமாக ஜொலிக்கும்!

அன்று மாலை அந்தக் குறிப்பிட்ட நேரத்தில், ஒரு ரஜினி படத்தில் அவர் 'என்ட்ரி'க்காக, முதல்நாள், முதல் 'ஷோ'வில், அவருடைய ரஸிகர்கள் காத்திருப்பது போல், எல்லோரும் காத்துக் கொண்டிருந்தனர்.

பாம்பு வந்தது.

படம் எடுத்தது.

'ராம்' மட்டுமில்லை. இன்னும் சில எழுத்துக்கள் இருந்தன!

படித்தார்கள். படித்து முடிக்கும் வரை பாம்பு ஆடாமல் அசையாமல் இருந்தது பாம்பு.

'ஈஸ்வர அல்லா தேரே நாம்' என்ற சொற்கள் 'பளிச்' என்று தெரிந்தன!

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

கவிதை

# வரிசை எண்

## ஆர் வத்ஸலா

உனக்கு நேரமில்லை

என்னிடம் பேசவோ
குறுஞ்செய்தி அனுப்பவோ
என்னைப் பற்றி
நினைக்கவோ

என் மேல் கொள்ளை அன்பு இருந்தாலும்

உனது பணிகளை
அவற்றின் முக்கியத்துவத்திற்கு ஏற்றாற்போல்
வரிசைபடுத்திக் கொள்கிறாய்
தினமும் காலையில்

அவ்வரிசைப்படி
தினமும்
காலை முதல் இரவு வரை
முடிக்கிறாய் பணிகளை
ஒவ்வொன்றாக
நேர்மையுடன்

பல பணிகளை முடித்தாலும்
மிச்சம் இருந்து விடுகின்றன
ஒரு சில
எப்போதும்
பட்டியலின்
கடைசியில்
என்னிடம் பேசுவது
அல்லது
குறுஞ்செய்தி அனுப்புவது
போன்றவை



மறுநாளும்
அதற்கு மறுநாளும்
அதற்கு மறுநாளும்
அதற்கு மறுநாளும்
தயாராகிறது
பட்டியல்
அதே போல

"ஆர்.வத்ஸலா" <vatsala06@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

